மதுரை

# சுதந்திரத் தமிழ் வாசகம்

நான்காம் வகுப்பு





சுப்பையா

...பாலகிருஷ்ணக் கோன்,
...துரை சென்னை.

மதுரை

# சுதந்திரத் தமிழ் வாசகம்

## நான்காம் வகுப்பு

---


பண்டித. G. விசுவாசம்

தமிழாசிரியர்

ஸெயின்ட் மேரீஸ் உயர்தரக் கலாசாலை

மதுரை






இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

மதுரை சென்னை

பதிப்புரிமை] 1949 [விலை அணு 9.

# முகவுரை

அரசாங்கத்தார் வகுத்துள்ள பாடத்திட்டங்களுக்கு இணங்க, 'சுதந்திரத் தமிழ் வாசகம்' என்ற பெயருடன் வெளி வரும் வாசக வரிசையில், இது நான்காம் புத்தகமாகும். இதன்கண் மாணவர்கள் உற்சாகத்துடன் படிக்குமாறு எளிய இனிய நடையில் பாடங்கள் எழுதப்பட்டுள்ளன. மாணவர்க்கு, நாட்டுப்பற்று, உழைப்பின் உயர்வு, பெரியோர்களிடத்து மரியாதை முதலிய நல்லியல்புகளை வளர்க்கும் வண்ணம் புதிய புதிய கருத்துக்களை விளக்குவனவாய்ப் பாடங்கள் அமைந்துள்ளன. பாடங்களின் முதலில் கொடுக்கப்பட்டுள்ள புதிய சொற்களும், முடிவிலுள்ள வினாக்களும், பயிற்சிகளும் மாணவர்களுக்கு மொழியறிவில் நல்ல பயிற்சி அளிக்குமென்றே நம்புகின்றேன். 3, 5, 7, 10, 22-வது பாடங்கள் மௌன வாசிப்புக்கு உரியனவாகக் கொள்ளத்தகும்.

ஆக்கியோன்.



தமிழ் மொழியை மிகுதியும் வளர்த்தவர்கள் பாண்டியர்கள். இவர்கள் ஆண்ட நாடு பாண்டிய நாடு. இந்நாட்டுக்குத் தலை நகரம் தென் மதுரை. இந் நகரில் பாண்டியரும், புலவர்களும் சேர்ந்து ஒரு தமிழ்ச் சங்கத்தை நிறுவினார்கள். அந்த ஊரைக் கடல் கொண்டு போயிற்று. பிறகு கபாடபுரம் என்ற ஊரில் மற்றொரு சங்கத்தைக் கூட்டினார்கள். அவ்விடமும் கடலில் மூழ்கினது. அதன்பின் இப்போதுள்ள மதுரையில் மூன்றாஞ் சங்கத்தை ஏற்படுத்தினர். இவை மூன்றும் முறையே முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம் எனப்படும்.

இச்சங்கப் புலவர்கள் சிறந்த புலமை உடையவர்கள்; நல்ல ஒழுக்கம் நிரம்பப் பெற்றவர்கள். அவர்கள் அரசர்களுக்கும் நல்லறிவு புகட்டினார்கள்; நல்ல வழியில் ஒழுகுமாறு செய்தார்கள். கடைச் சங்கப் புலவர்கள் பாடிய நூல்கள் பல. அவைகள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்பனவாம். தமிழ் மொழியில் சிறந்த இலக்கண நூல் ஒன்று இருக்கிறது. அது தொல்காப்பியம் எனப்படும். அது பழமையானது. இந்நூல்களைப் பாடிய புலவர்கள் ஒரு சாதியினர் அல்லர்; ஒரு சமயத்தினர் அல்லர். அக்காலத்தில் ஔவை முதலிய பெண்பாற் புலவர்களும் இருந்தனர்.

நூல் எழுதுவோர் நூலாசிரியர் எனப்படுவர். நூலுக்கு உரை எழுதுவோர் உரையாசிரியர் ஆவர். தமிழ்ப் புலவர்களில் தலைசிறந்தவர்கள் திருவள்ளுவர், கபிலர், பரணர், கம்பர் முதலியோர். அரசர்களிற் சிலரும் கவி பாடியிருக்கின்றனர்.

புத்தர்களும், சைனர்களும் தமிழ் நூல்கள் பல இயற்றியிருக்கிறார்கள். பிற்காலத்தில் முகமதியர்களும், கிருஸ்தவர்களும் தமிழில் பல நூல்கள் இயற்றியிருக்கின்றனர். ஆங்கிலேயர்களும் தமிழ் மொழியைக் கற்றுத் தமிழ்த் தொண்டு செய்திருக்கின்றனர்.

இக்காலத்தில் மொழி பெயர்ப்பு நூல்களும், நவீனங்களும், ஆராய்ச்சி நூல்களும் பெருகி வருகின்றன. தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் ஆகிய மொழிகள் தமிழின் கிளை மொழிகளாகும். இவை யாவும் திராவிட மொழிகள் என்று சொல்லப்படும்.

நீங்கள் யாவரும் தாய் மொழியாகிய தமிழ் மொழியை அன்போடு கற்கவேண்டும். தமிழ் நூல்களைப் படித்து இன்புற வேண்டும். நல்லொழுக்க முடையவர்களாய் விளங்க வேண்டும். நமது தாய் மொழிக்குத் தொண்டு செய்து நாளும் வளர்ப்பீர்களாக.

## வினக்கள்

1. தமிழ் மொழி எவ்வாறு தனிச் சிறப்புடையதாகும்?
2. பண்டைத் தமிழகத்தின் பரப்பினைக் கூறுக.
3. முச்சங்கங்களை எங்கு யார் நிறுவினர்? அவை எவ்வாறு அழிந்து பட்டன?
4. சங்க நூல்கள் எவை? அக்காலப் புலவருள் சிறந்தவர் யாவர்?
5. பிற்காலத்துத் தமிழ் மொழி எவ்வாறு போற்றப்பட்டது?

## பயிற்சி

பின்வரும் சொற்களை வைத்து வாக்கியம் அமைக்க:

தாய்மொழி, நிறுவினர், நல்லறிவு, தலைசிறந்தவர், புலவர்கள், நல்லொழுக்கம், நிரம்ப.

# 2. பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| பற்று | புத்துயிர் | சுதந்திரம் | மறுமலர்ச்சி |
| தேர்ச்சி | தேசீயம் | பத்திரிகை | பெருமக்கள் |
| சின்னம் | பெருமான் | அரசாங்கம் | மணிமண்டபம் |

நமது தமிழகத்தில் தோன்றிய புலவர் பெருமக்கள் பலர். அவருள் தமிழ்நாட்டுக்குப் புத்துயிர் அளித்த புலவர் பெருமான் நமது பாரதியார் ஆவார்.



இவர் நமது நாட்டின் மறுமலர்ச்சிக்கு அருந்தொண்டாற்றிய வீரர். "அச்சமில்லை, அச்சமில்லை" என்று கூறி, நிலை கலங்காது மலையென நின்ற பெரியார்.

பாரதியார் திருநெல்வேலியைச் சார்ந்த எட்டய புரத்தில் ஏறக்குறைய அறுபதாண்டுகளுக்கு முன்னே பிறந்தார். இவரது தந்தையார் சின்னச்சாமி ஐயர். இவர் தமது ஐந்தாம் ஆண்டிலேயே தாயாரை இழந் தார். அதுமுதல் தந்தையாரே தாயுமாய் இருந்து இவரை வளர்த்து வந்தார். இவர் இளமையிலேயே கவி பாடுவதில் பெரு விருப்புடையராக விளங்கினர். இவருக்குத் தமிழ் மொழியிலிருந்த பற்று அளவிடற் கரியது. இவரது கவித் திறமையால் பாரதியார் என்று அழைக்கப் பெற்றார். இவர் ஆங்கிலம், வட மொழிகளிலும் தேர்ச்சி பெற்றவர்.

இவர் சில காலம் எட்டயபுரம் அரசரிடத்தில் அவைப் புலவராக இருந்தார். பின் பத்திரிகை களுக்கு ஆசிரியராக இருந்து, மக்களுக்குத் தமிழ்ப் பற்றை வளர்த்தார். தமிழ்நாட்டில் விடுதலை யுணர்ச்சி பரவத் தொண்டாற்றினர். அரசாங்கத்தையும் கண் டித்து எழுதினர். அரசாங்கத்தார் இவரைத் துன்பு றுத்தினர். அக்காலத்திலும் இவர் அஞ்சாது பல கட்டுரைகளை எழுதி மக்களைத் தட்டி எழுப்பினர். இவர் எழுதிய நூல்கள் பல.

பாரதியாருக்கு இசையிலும் நல்ல பயிற்சி யுண்டு. இவரது பாடல்கள் மிகவும் இனிமையாய் இருக்கும். மக்களிடத்தில் நாட்டுப்பற்றை வளர்க்க, அற்புதமான தேசியப் பாடல்களைப் பாடினர். இவர் பாடிய பாடல் கள் எண்ணிறந்தனவாகும். இவரது பாடல்களைப் பாடாத-படிக்காத சிறுவர்கள் நம்நாட்டில் இரார்.

இவர் செய்த தொண்டின் பயனாக நமது நாடு சுதந் திரம் பெற்றது. இவர் செய்த பெருந்தொண்டைப்

பாராட்டிய நமது நாட்டார் இவர் பிறந்த ஊரில் ஒரு சிறந்த மணிமண்டபம் கட்டியிருக்கிறார்கள். அது இவரது நினைவுச் சின்னமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. இவரது நூல்களை அரசாங்கத்தார் விலை கொடுத்து வாங்கிப் பொன்னே போல் போற்றி வருகின்றார்கள்.

பிள்ளைகளே! நீங்களும் நமது பாரதியாரைப் போல் நன்கு கற்று, நமது நாட்டுக்குத் தொண்டு செய்வீர்களாக.

### வினாக்கள்

1. பாரதியார் மிக்க பெருமை வாய்ந்தவர் எவ்வாறு?
2. பாரதியாரின் பிறப்பு, வளர்ப்பு பற்றி நீ அறிந்தன கூறுக.
3. பாரதியாரியற்றிய தொண்டுகள் யாவை?
4. அவர் பாடிய நூல்கள் யாவை?
5. பாரதியாரின் நினைவாக விளங்குவது யாது?

### பயிற்சி

பகலுக்கு மாறுபட்ட பொழுது இரவு எனப்படும். இவ்வாறு மாறுபட்ட சொற்களுக்கு எதிர்ப்பதம் என்று பெயர்.

பின் வருவனவற்றிற்கு எதிர்ப்பதம் கூறுக:

நாடு, பலர், இளமை, பிறந்த.

இவர் பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்து மக்களுக்கு நல்லறிவை வளர்த்தார் - இது நீண்ட வாக்கியம். இவர் பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்தார்; மக்களுக்கு நல்லறிவை வளர்த்தார்- இவ்வாறு சிறுசிறு வாக்கியங்களாகப் பிரிக்கலாம்.

---

# 3. உத்தமன் உதவி பெற்றது

| | | | |
|---|---|---|---|
| மீதம் | சோப்பு | தேறுதல் | மன்னிக்க |
| பாக்கி | வாசனை | தப்பித்து | சீமான்கள் |
| உதவி | தேவை | சென்னை | ஒழுகுதல் |
| சலித்த | விபத்து | சில்லறை | சிதறுண்டு |
| ரூபாய் | சிகிச்சை | இவற்றில் | கனவான்கள் |
| ஏந்திய | பசியாற | மலிவான | மோதப்பட்டு |
| தெளிவு | ஏமாற்றி | உத்தமன் | சிற்றுண்டிச்சாலை |

ஒரு நாள் இரண்டு கனவான்கள் சென்னைமா நகரிலுள்ள ஒரு சிற்றுண்டிச்சாலையின் வாசலில்



நின்று கொண்டிருந்தார்கள். அச்சமயம், உத்தமன் என்ற ஓர் ஏழைப் பையன், சோப்புப் பெட்டிகளை ஏந்திய கையுடன் அக் கனவான்களிடம் வந்தான். அவர்களைப் பார்த்து, "சீமான்களே, என்னிடம் சில சோப்புப் பெட்டிகள் இருக்கின்றன. நான் மலிவான

விலைக்குத் தருகிறேன். நீங்கள் வாங்கிக்கொள்ள வேண்டும்'' என்று சொன்னான்.

அந்தக் கனவான்களில் ஒருவர், "பையா, எனக்கு ஒன்றும் தேவையில்லை'' என்றார். மறுபடியும் அப்பையன், "ஐயா, இப்பெட்டிகள் அழகானவைகள். சோப்புகள் மிக்க வாசனையுள்ளவை. சோப்பு ஒன்று ஓர் அணுத்தான் விலை'' என்று கூறினான். மீண்டும் கனவான், "தேவையில்லை'' என்றார். இப்படிப் பலமுறை கேட்டுச் சலித்த சிறுவன், "ஐயா, உங்களுக்காக ஓர் அணாவிற்கு இரண்டு சோப்புகள் தருகின்றேன்; பெற்றுக்கொள்ளுங்கள்'' என்றான்.

இதைக் கேட்ட கனவான், 'ஏது! இவனிடம் இருந்து தப்பித்துக்கொள்ள முடியாதுபோல் இருக்கிறதே!' என்று கருதி, "பையா, இப்போது பன்னிரண்டு சோப்புகள் வாங்கிக் கொள்கிறேன். ஆனால், என்னிடம் சில்லறை யில்லையே'' என்றார். அதற்கு அப்பையன், "ஐயா, நான் பசியாயிருக்கிறேன். இப்பொழுதே வாங்கிக்கொள்ளுங்கள். ரூபாயாக இருந்தாலுங் கொடுங்கள். நான் சில்லறை மாற்றிப் பசியாறிவிட்டு, மீதியைக் கொண்டுவந்து தருகின்றேன்'' என்றான். கனவான் உடனே ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்தார். பையன் சில்லறை மாற்றப் புறப்பட்டுப் போனான். போனவன் வெகு நேரம் ஆகியும் வரவில்லை. பையன் வராததைக் கண்ட கனவான், தன்னைச் சிறுவன் ஏமாற்றி விட்டானென்று எண்ணி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்.

ஆனால், சென்ற பையன் வழியில் குதிரை வண்டியால் மோதப்பட்டுக் கீழே விழுந்து மயங்கிக் கிடந்

தான். அதனால் பல காயங்கள் அவனுக்கு ஏற்பட்டன. நாணயங்களும், சோப்புகளும் சிதறுண்டு போயின. ஐயோ பாவம்! பின்னர் அங்கு வந்த அவன் தம்பி, அவனை வீட்டிற்கு எடுத்துச் சென்று படுக்கையில் கிடத்தினான்.

அப்பால், உத்தமன் தெளிவுற்றுத் தன் சகோதரனைப் பார்த்து, "தம்பி, சிற்றுண்டிச் சாலையின் வாசலில் இரண்டு கனவான்கள் எனக்காகக் காத்துக்



கொண்டிருப்பார்கள். நீ அவர்களிடம் போய் நடந்ததைச் சொல்லி, இந்த ஆறு அணவையும் கொடுத்து விட்டு வா" என்று கூறி அனுப்பினான்.

உத்தமன் தம்பி ஓடிப்போய்ச் சிற்றுண்டிச்சாலையை யடைந்து, அக் கனவான்களைப் பார்த்தான். "ஐயா, நீங்கள்தானா என் அண்ணனிடம் சோப்பு வாங்கினவர்கள்?" என்று கேட்டான். அதற்கு ஒரு கனவான், "ஆம் அப்பா, நான் தான்" என்று உரைத்தார். சிறுவன் தன் அண்ணனுக்கு நேர்ந்த

துன்பத்தை அவரிடம் சொன்னான். "மீதமிருந்தது ஆறு அணுத்தான். பாக்கிச் சில்லறையும், சோப்பு களும் தவறிப் போயின. மன்னிக்க வேண்டும்" என்று கூறி ஆறு அணுவைக் கொடுத்தான்.

கனவான், உத்தமனுக்கு நேர்ந்த விபத்தை நினைத்து மிகவும் வருந்தினார்; அவனுடைய உத்தம குணத்திற்காகப் புகழ்ந்து, அவனுக்கு ஏதேனும் உதவி செய்ய வேண்டுமென்று கருதினார்; சிறுவனு டன் அவன் இருக்குமிடத்துக்குச் சென்று அவனைப் பார்த்தார். உத்தமன் அவருக்கு வந்தனம் செய்தான். அவனால் பேசவும், எழுந்திருக்கவும் முடியவில்லை. கனவான் அவனுக்குத் தேறுதல் கூறி, வைத்தியரைக் கொண்டு சிகிச்சை செய்வித்தார். அவருடைய உதவி யினால் அவன் சுகமடைந்தான்.

பிள்ளைகளே! நீங்களும் உத்தமனைப்போல் ஒழுக வேண்டும். எவரையும் ஏமாற்ற நினைக்காதீர்கள்.

### வினாக்கள்

1. சோப்பு விற்ற உத்தமன் கனவான்களிடம் என்ன சொல் லிச் சோப்புப் பெட்டி வாங்கும்படியாகச் செய்தான்?
2. கனவானிடத்தில் சில்லறை இல்லாததால் உத்தமன் என்ன சொல்லி ரூபாய் வாங்கினான்?
3. சில்லறை மாற்றப்போன சிறுவனுக்கு என்ன நேரிட்டது?
4. உண்மை உரைத்ததால் அவன் அடைந்த நன்மை என்ன?

### பயிற்சி

எதிர்ப்பதம் எழுதுக:— இல்லை, நன்மை, சுகம், புகழ்ந்து.

கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:—

1. நீங்களும் உத்தமனைப் போல —— வேண்டும்.
2. அவருடைய —— அவன் —— அடைந்தான்.

---

## 4. கயிறு திரித்தல்

| | | | |
|---|---|---|---|
| புரி | இழை | மட்டை | இயந்திரம் |
| சவுரி | முறுக்கி | திரித்தல் | இராட்டினம் |
| மிருது | பருமன் | உரோமம் | கொச்சைக்கயிறு |

கயிறு திரித்தல் என்பது கையால் செய்யப்படும் தொழில்களில் ஒன்ருகும். இத்தொழிலுக்கு இயந்திரத்தின் உதவி வேண்டியதில்லை. இத்தொழில் குடிசைத் தொழில் எனவும் சொல்லப்படும்.

கையாலும், ராட்டினத்தாலும் நூற்பதற்கு நூல் என்று பெயர். இழை என்றும் சொல்லப்படும். பல இழைகளை ஒன்று சேர்த்து, முறுக்கியோ, திரித்தோ செய்யப்படுவது கயிருகும். கயிறுகள் நூல், தென்னஞ் சவுரி, சணல், பட்டு, ஆட்டுரோமம், நார் முதலிய பல பொருள்களாலுஞ் செய்யப்படும்.



கயிறுகள், செய்யப்படும் பொருள்களுக்கேற்ப உறுதியாயும், மென்மையாயும் இருக்கும்.

நூற்கயிறு நமக்குப் பல வழிகளில் பயன்படுகிறது. அது உறுதியாகவும், மிருதுவாகவும் இருக்கும். இதைத் திரிப்பது எளிது. இரண்டு மூன்று இழைகளை ஒன்று சேர்த்துக் கையாலேயே திரிப்பார்கள். கடைகளில் விற்கப்படுகின்ற நூற்கயிறுகள், பட்டுக்கயிறுகள் யாவும் இவ்வகையாகத் திரிக்கப்பட்

டனவே. இன்னும் பருமனாக வேண்டுமானால், அப்படித் திரிக்கப்பட்ட பல புரிகளை ஒன்று சேர்த்து எதிர்ப் புறமாக முறுக்குவார்கள். அவை முறுக்கேறிக் கயிறாகும்.

தென்னைமட்டையிலுள்ள சவுரியில் இருந்து தயாரிப்பது கொச்சைக் கயிறாகும். மட்டையைத் தண்ணீரில் ஊறவைத்துப் பிறகு அதைக் கொட்டாப்புளியால் அடிப்பார்கள். மட்டையிலுள்ள சவுரிகள் பிரிந்து விடும். அச்சவுரிகளைச் சிக்கல் போக்கிக் காயவைப்பார்கள். காய்ந்த பிறகு கையால் திரிப்பார்கள். இவ்வாறு திரித்த புரிகள் பலவற்றைச் சேர்த்து வேண்டிய அளவில் கயிறுகளை முறுக்குவார்கள்.

இக்கயிறு, வீட்டில் தண்ணீர் இறைப்பதிலிருந்து பெரிய தேரிழுப்பது வரை பயன்படுத்தப்படுகிறது. பனை நாரிலிருந்தும், சணலிலிருந்தும், புளிச்சை நாரிலிருந்தும் இம்மாதிரியே கயிறுகள் திரிக்கின்றார்கள். ஆட்டுரோமத்தால் செய்யப்படும் கம்பளிக்கயிறு ஆடு மாடுகளைக் கட்டப் பயன்படுகிறது. பட்டுக்கயிறுகளும் சில காரியங்களுக்குப் பயன்படுகின்றன. சணல் கயிறுகளைக் கொண்டு சாக்குப் பைகள் செய்யப்படுகின்றன.

முற்காலங்களில் வாழ்ந்த மக்கள் தம் தேவைக்கான கயிறுகளைத் தம் கைகளாலே திரித்துக் கொள்வார்கள். ஆண்மக்களும், பெண்மக்களும் வீட்டில் இருந்து கொண்டே இத்தொழிலைச் செய்யலாம். இக்காலத்திலும் நாடு நகரங்களில் வாழும் எளிய மக்களால் இக்கயிறு திரித்தல் செய்யப்பட்டு வருகின்றது.

## வினுக்கள்

1. கயிறுதிரித்தல் எவ்வகைப்பட்ட தொழில்?
2. எவ்வெப் பொருட்களால் கயிறு திரிக்கப்படுகிறது?
3. கயிறு எவ்வாறு திரிக்கப்படுகிறது?
4. கயிற்றின் உபயோகம் என்ன?

## பயிற்சி

கோடிட்ட இடங்களில் பின் வரும் சொற்களில் பொருத்த மானவற்றை வைத்து வாக்கியத்தை முடிக்க:

சொல்லப்படும், திரிப்பார்கள், செய்யலாம்.

1. சவுரிகள் காய்ந்த பிறகு கையால் ——— .
2. இத்தொழில் குடிசைத் தொழில் எனவும் ——— .
3. ஆண்மக்களும் பெண்மக்களும் வீட்டிலிருந்துகொண்டே இத்தொழிலை ——— .

மனிதன், தென்னை-இச் சொற்களை அவை குறிக்கும் பொருள் களுக்குப் பெயர்களாக வழங்குகிறோம். இவ்வாறு வருவது பெயர்ச் சொல் எனப்படும்.

'ராட்டினம்' என்பது ஒரு பொருளின் பெயர், 'நாடு' என் பது இடத்தைக் குறிக்கும் பெயர், 'நாள்' என்பது காலத்தின் பெயர், 'கை' என்பது உறுப்பு அல்லது சினைப் பெயர், 'நன்மை' என்பது குணப்பெயர், 'சிக்கல்' என்பது தொழிற் பெயர். இவ் வாறு பெயர்ச் சொற்களை ஆறு வகையாகப் பிரிக்கலாம்.

பின் வருவனவற்றுள் ஆறு வகைப் பெயர்களையும் கூறுக:

வீடு, உதவி, கயிறு, ஆடு, மென்மை, தயாரித்தல், மட்டை, தென்னை, வாரம்.

சொற்களைச் சரியாக வைத்து வாக்கியமாக்குக:

1. விபத்தை, கனவான், நேர்ந்த, உத்தமனுக்கு, வருந்தினர், நினைத்து, மிகவும்.

---

## 5. ஊசி வாங்கிய சீடர்கள்

| | | | |
|---|---|---|---|
| குரு | சொருகி | பணிந்து | தவறுதல் |
| சீடர் | வியப்பு | விரைந்து | மதியீனம் |
| ஆடை | காரியம் | பேதமை | ஆச்சரியம் |
| வழக்கு | கூர்மை | தொண்டு | வேண்டினன் |

ஒரு ஊரில் குரு ஒருவர் இருந்தார். அவருக்கு நான்கு சீடர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு மட்டி,



மடையன், மூடன், முட்டாள் என்று பெயர். இவர்கள் நால்வரும் தமது குருவுக்குப் பணிந்து தொண்டாற்றி வந்தனர்.

ஒருநாள் குருவினுடைய ஆடையானது கிழிந்து விட்டது. அச்சமயம் மாற்றுடை அவரிடத்தில் இல்லை. ஆதலால் குரு தன் சீடர்களை யழைத்து, "எனது

ஆடை கிழிந்து விட்டது. அதைத் தைக்கவேண்டும்; நம்மிடம் நூல் இருக்கிறது. ஊசி எங்கேயோ தவறி விட்டது. ஆதலால் கடைக்குச் சென்று ஓர் ஊசி வாங்கிக்கொண்டு வாருங்கள்'' என்ருர். அதன் பின் ஒரு ரூபாயை எடுத்து மட்டி கையில் கொடுத்தார். அவன் அதை வாங்கிக்கொண்டு, மற்றவரையும் தனக்குத் துணையாக அழைத்துக்கொண்டு கடைத்தெருவிற்குச் சென்ருன்.

நால்வரும் விரைந்து கடைக்குப் போயினர். மட்டி, கடைக்காரனைப் பார்த்து, ''ஐயா! எங்கள் குருவிற்கு ஒரு ஊசி வேண்டும். இதோ ரூபாய்; இதைப் பெற்றுக்கொண்டு ஒரு ஊசி கொடும்'' என்று வேண்டினன். கடைக்காரன் அவனது மதியீனத்தைத் தெரிந்து, ரூபாயை வாங்கிக்கொண்டு ஒரு ஊசியைத் தந்தான்.

மட்டி, அவ்வூசியை வாங்கிப் பார்த்து, அதன் கூர்மையையும் அழகையும் கண்டு வியந்து, மற்றவர்களுக்குக் காட்டினன். அவர்களும் அதைக் கண்டு ஆச்சரியமுற்றுப் போட்டி போடத் தொடங்கினர். அப்பொழுது மூடன், ''இருக்கட்டும், அவ்வூசியை என்னிடம் கொடு; நான் எடுத்துக்கொண்டு வருகிறேன்'' என்ருன். அதன் பிறகு முட்டாள், ''கூடாது கூடாது, அதை என்னிடம்தான் கொடுக்கவேண்டும்'' என்று கேட்டான். முடிவாக, மடையன் என்பவன், மற்றவர்களைப் பார்த்து, ''நமது குருமணி இந்த ஊசியை விலை கொடுத்து வாங்கிவர நம்மை அனுப்பினர். ஆதலால், இதை நாம் நால்வரும் கொண்டு செல்வதே முறையாகும்'' என்று வழக்காடினன்.

அதைக் கேட்ட மட்டி, "சரி, சரி, இவ்வளவு சிறிய ஊசியை நாம் நால்வரும் எடுத்துச் செல்ல முடியாது. ஆதலால் நான் ஒரு உபாயம் சொல்கிறேன் கேளுங்கள்.

"இதோ கீழே வீழ்ந்து கிடக்கும் பனை மரத்தில் இவ்வூசியைச் சொருகி, இந்த மரத்துடன் சுமந்து கொண்டு போய்ச் சேர்க்கலாம்" என்றான். அவ்வண்ணமே, ஊசியைப் பனைமரத்தில் சொருகி, அப்பனை மரத்தை நான்கு சீடரும் தூக்கிக்கொண்டு போய், குருவின் முன் போட்டார்கள்.

குரு அதைக் கண்டு ஆச்சரியமுற்று, "ஊசி எங்கே?" என்று கேட்டார். அவர்கள் அந்த மரத்தில் தேடிப் பார்த்தனர். அது வழியில் எங்கேயோ விழுந்து தவறிப் போயிற்று. பின்னர் நால்வரும் நடந்ததைத் தமது குருவினிடம் கூற, குரு அவர்களது பேதமைக்கு நகைத்தார். அதைக் கண்ட சீடர்கள் தாங்கள் செய்து வந்த காரியத்தில் குருவுக்கு மிகுதியும் மகிழ்ச்சியுண்டாயிற்று என்றெண்ணி, அவர்களும் சிரித்தார்கள்.

### வினாக்கள்

1. குரு சீடர்களிடம் யாது கூறினர்?
2. சீடர்களிடையே என் வாக்குவாதம் ஏற்பட்டது?
3. ஊசியை அவர்கள் எவ்வாறு எடுத்து வந்தனர்?
4. இவர்களைப் பற்றிய நின் கருத்து யாது?

### பயிற்சி

பின்வரும் சொற்களை வைத்துச் சொந்தமாக வாக்கியம் எழுதுக:

மகிழ்ச்சி, கிழிந்து, மதியீனத்தை, தேடி.

---

# 6. மதப் பெரியார்கள்

| | | | |
|---|---|---|---|
| மதம் | அருள் | சிந்தனை | அற்புதம் |
| தவம் | பாமரர் | நாடினர் | கொள்கை |
| அரிய | ஞானம் | தூய்மை | நீலநாட்டி |
| துறவி | உதயம் | இன்னல் | பௌத்தமதம் |

நமது நாட்டில் பல பெரியார்கள் தோன்றியிருக்கிறார்கள். அவர்கள் அரிய பெரிய செயல்களைச் செய்திருக்கின்றார்கள். அவர்களில் மதத்திற்காகப் பாடுபட்டு, மக்களை நல்வழியில் ஒழுகச் செய்த மூவர்களைப்பற்றித் தெரிந்துகொள்வோம்.

நமது நாட்டில் பல மதங்கள் இருக்கின்றன. அவற்றுள் பௌத்தமதம் ஒன்று. இம்மதத்தைத் தோற்றுவித்தவர் கௌதமர் எனப்படுவார். இவர் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கபிலவாஸ்து என்னும் இடத்தில் அரச குடும்பத்தில் தோன்றினர். இவர் சிறு வயதிலிருந்தே பிறவுயிர்களிடத்தில் அன்பும் அருளும் உடையவராய் இருந்தார். எல்லா உயிர்களுக்கும் நன்மையையே நாடினர். ஆதலால், இவர் இளமையிலேயே அரச இன்பங்கள் எல்லாவற்றையும் வெறுத்துத் துறவியாகித் தவம் செய்தார். பிறகு இவருக்கு ஞானம் உதயமாயிற்று. அன்று முதல் இவர் புத்தர் என்று அழைக்கப்பட்டார். இவர் தாம் கண்ட உண்மைகளை மக்களுக்கு எடுத்துரைத்து, அவர்களை நன்னெறியில் ஒழுகச் செய்தார்.



இவரைப் பின்பற்றியவர்கள் பௌத்தர்கள் எனப் படுவார்கள். இவரது சிறந்த கொள்கைகளிற் சில:— "ஆசையை ஒழித்தல் வேண்டும். பிறவுயிர்களைத் தன்னைப்போல் நேசித்தல் வேண்டும். மனம் தூய்மையாயிருக்க வேண்டும். வாழ்க்கை குற்றமற்றதாயிருக்க வேண்டும்'' என்பனவாம். இவர் தமது 80-வது வயதில் உயிர் துறந்தார். இப் பௌத்த மதம் இப்பொழுது சீனா, ஜப்பான், பர்மா முதலிய இடங்களில் இருந்து வருகிறது.

தமக்குத் துன்பம் செய்தவர்களையும் நேசித்து, அருள் நெறியை நிலைநாட்டிய பெரியார் ஏசுநாதராவர். இவர் பெத்லகேம் என்ற ஊரில் தோன்றினார். இவர் மக்களின் அஞ்ஞானத்தைப் போக்கினார்; ஞானத்தை உபதேசித்தார். இவர் செய்த அற்புதங்கள் பல. இவர் பாபிகளுக்காகத் தமது உயிரைக் கொடுத்தார். மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். மக்களது குற்றங்களைப் பொறுத்தருள வேண்டும் என்று கடவுளை வேண்டிக் கொண்டார். இவரைப் பின்பற்றியவர்கள் கிருஸ்தவர்கள் எனப் படுவார்கள். இவர்களது மதம் கிருஸ்துவ மதம் என்று சொல்லப்படும்.



இம்மதம் உலகில் பெரும் பாகங்களில் பரவியிருக்கிறது.

பாமரராய்த் திரிந்த மக்களுக்குக் கடவுளின் உண்மையை விளக்கிச் சீர்திருத்திய பெரியார்களுள் முகம்மது நபி ஒருவர். அவர் மெக்கா நகரில் பிறந்தவர். தாம் கண்ட உண்மைகளை அவர் மக்களுக்குப் போதித்தார். அவர் சொல்லிய உண்மை மொழிகளைக் கேட்ட பலரும் அவரது கொள்கைகளைப் பின்பற்றினர்கள். அவர்களுக்கு முகமதியர் என்று பெயர். அவர்களது மதத்திற்கு இஸ்லாம் மதம் என்று பெயர். இப்பொழுது இஸ்லாம் மதம் உலகத்தில் எங்கும் பரந்து விளங்குகிறது. அவரது போதனைகளிற் சில:— "கடவுள் ஒருவரே. அவரையே எல்லாரும் வணங்க வேண்டும். கடவுளுக்கு வடிவம் இல்லை. ஆண்டவன் முன்னே யாவரும் சமம்" என்பனவாம்.

## வினாக்கள்

1. புத்தரின் வாழ்க்கை வசலாற்றினை வரைக.
2. முகம்மது நபியின் பொன் மொழிகள் யாவை?
3. ஏசுநாதர் யார்? அவரைப்பற்றி வரைக.

## பயிற்சி

சீனா, ஜப்பான், பர்மா முதலியன கீழ்த்திசை நாடுகள்.

முன்னுள்ள வாக்கியத்தில் காற்புள்ளி வரும் இடங்களைக் கவனி. ஒரே வகையைச் சேர்ந்த சொற்கள் அடுக்கிவரும்பொழுது, அவற்றைத் தனித்தனி பிரித்துக் காட்டக் காற்புள்ளி இடப்படுகிறது. வாக்கியத்தின் முடிவில் இடப்படுவது முற்றுப்புள்ளி என்பது உங்களுக்குத் தெரியும். பின்வரும் வாக்கியத்தில் காற்புள்ளிகளையும், முற்றுப் புள்ளியையும் அமைக்க:—

நாம் அன்பும் அருளும் உடையவராக வாழவேண்டும்

---

# 7. தந்தை சொல் காத்த தநயன்

| | | | |
|---|---|---|---|
| முறை | சமயம் | உத்தரவு | முதுமொழி |
| ஆணை | கூவினர் | பரிதாபம் | பாதுகாப்பு |
| மாலுமி | கட்டளை | மைந்தன் | கீழ்ப் படிதல் |
| திறமை | குமாரன் | குண்டுகள் | சின்னு பின்னம் |

முன்னொரு காலத்தில் ஒரு மாலுமி இருந்தான். அவன் திறமையாக வேலை பார்த்து வந்தான். அதனால் சில நாட்களில் மாலுமித் தலைவனாக உயர்த்தப்பட்டான். அவனுக்கு ஒரு குமாரன் இருந்தான். அவன் பெயர் கசபியான்கா என்பது.

கசபியான்கா, தன் தந்தையிடத்தில் அன்புடையவனாகவும், கீழ்ப்படிதல் உள்ளவனாகவும் இருந்து வந்தான். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற முதுமொழியின்படி அவன் தந்தை சொல்லைத் தட்டாமல் செய்து வந்தான். கசபியான்கா எப்பொழுதும் தந்தையுடன் இருப்பான்; கப்பலிலும் தந்தையுடன் சென்று வருவான். அவனை யாவரும் நேசித்தார்கள்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு கடல் யுத்தம் தொடங்கியது. இரண்டு பெரிய போர்க் கப்பல்கள் ஒன்றையொன்று எதிர்த்துப் போர் செய்தன; அளவற்ற குண்டுகளை எறிந்தன. அதிக நேரம் வெற்றி தோல்வியின்றிச் சண்டை நடந்து கொண்டு இருந்தது. இரண்டு கப்பல்களிலும் இருந்த மாலுமிகளிற் சிலர் இறந்தனர். சண்டை நடந்து கொண்டிருந்த பொழுது, கசபியான்காவும் தந்தையுடன் கப்பலில் இருந்து கொண்டு, 'என்ன நேருமோ' என்று எண்ணி அஞ்சிக் கொண்டிருந்தான்.

சண்டை நடந்து கொண்டிருந்த சமயத்தில் மாலுமித் தலைவன் தன் மைந்தனை ஒரு பாதுகாப்பான இடத்தில் இருத்தி, 'யான் உத்தரவு கொடுக்கும்வரையில் இவ்விடத்தை விட்டு நீங்கலாகாது' என்று கட்டளையிட்டான். கசபியான்கா, தன் தந்தையின் கட்டளைப்படியே அவ்விடத்தை விட்டுச் சற்றும் நீங்காமல் இருந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் பகைவர்கள் அக்கப்பலில் தீவைத்து விட்டார்கள். கப்பல் தீப் பற்றி எரிந்



தது. அவ்வபாயத்தைக் கண்ட மாலுமிகள் அனைவரும் கப்பலை விட்டுச் சிறுசிறு படகுகளில் இறங்கி உயிர்தப்பிச் சென்றனர். அவர்கள் செல்லும்பொழுது, அச் சிறுவனையும் தம்மோடு வந்து விடும்படி கூவினார்கள். அவன் அதற்குக் காது கொடாது தன் தந்தையையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்; கப்பல் தலைவனை

தன் தந்தையின் உத்தரவு பெருமையால் அவ்விடத்தை விட்டு அகலாதிருந்தான்.

கப்பல் தீ அவனைச் சுற்றிலும் சூழத் தொடங்கியது. அவனோ தந்தையின் ஆணையை எதிர்பார்த்து நாற்றிசையும் நோக்கியவாறே இருந்தான். ஐயோ! பரிதாபம்! அவனது தந்தையோ அச்சமயம் பெரிய பீரங்கிக் குண்டால் அடிபட்டு இறந்து கிடந்தான். சிறுவன் அதனையறியாது, 'தந்தையே! தந்தையே! நான் அங்கு வரலாமா?' எனக் கதறினான்.

அந்தோ! அவனது உடையிலும், தலைமயிரிலும் தீப் பற்றிக் கொண்டது. "அப்பா! அப்பா! இப்பொழுதாவது நான் வரலாமா? சொல்லுங்கள்" என்று மறுபடியும் கூவினான். மறுமொழி ஒன்றும் இல்லை. இதற்குள் கப்பலிலுள்ள வெடி மருந்து தீப் பற்றி வெடித்ததனால் கப்பல் சின்ன பின்னமாகியது. சிறுவனும் கடவுளைத் தொழுது கொண்டே உயிர் விட்டான்.

பிள்ளைகளே! நீங்கள் உயிர் நீங்குவதாயிருந்தாலும் பெரியோர் இட்ட கட்டளையைத் தட்டலாகாது.

### வினாக்கள்

1. கசபியான்காவின் நற்பண்புகள் யாவை?
2. அவன் எவ்வாறு தந்தையின் மொழிகளைப் போற்றினான்?
3. இப்பாடத்தால் நீங்களறியும் நீதி என்ன?

### பயிற்சி

சொற்களை வைத்துச் சொந்தமாக வாக்கியம் அமைக்க:

எதிர்த்து, பரிதாபம், கடமை, உத்தரவு.

பின்வரும் சொற்களுக்குப் பன்மை கூறுக:

சிறுவன், திசை, துணி, கப்பல்.

# 8. ஜெயக் கொடி



கொடி உயர்த்திடுவோம்—ஜெயக்
  கொடி உயர்த்திடுவோம்.
கடமை காத்திடுவோம்—தியாகக்
  கனல் குளித்திடுவோம். (கொடி)

ஒற்றுமையாய்ப் பணிவோம்—தாயின்
  ஓங்கும் ஜெயக்கொடியை.
வெற்றிகள் கூறிடுவோம்—சுற்றி
  வீர நடப்புரிவோம். (கொடி)

பார்நிலம் உள்ளமட்டும்—ஜெய
  பாரதம் உள்ளமட்டும்.
ஆருயிர் உள்ளமட்டும்—இதன்
  அறத்தைக் காத்திடுவோம். (கொடி)

நல்லதை ஆதரிப்போம்—தீமை
  நலியப் போர் புரிவோம்.
எல்லாரும் இன்புறவே—மணிக்கொடி
  ஏற்றிப் பணிந்திடுவோம். (கொடி)

— *யோகி சுத்தானந்த பாரதி.*

# 9. தேசிங்கு ராஜன்

| | | | |
|---|---|---|---|
| முரசு | கப்பம் | வஞ்சம் | திகைப்பு |
| பரிசு | பருவம் | ஆண்டு | வண்ணம் |
| சினம் | மானம் | காரியம் | சந்தித்தல் |
| நவாப் | திறமை | அரசியல் | விளம்பரம் |

பல ஆண்டுகளுக்கு முன் செஞ்சியில் ஓர் அரசன் இருந்தான். அவன் பெயர் தரணி சிங்கு. தரணி சிங்கு ஆற்காட்டு நவாபின் ஆட்சிக்குட்பட்டு கப்பம் கட்டி வந்தான். ஆற்காட்டு நவாப் டில்லி பாதுஷாவின் அதிகாரத்திற்கு உட்பட்டவர்.

அக்காலத்தில் பாதுஷாவிடம் ஒரு முரட்டுக் குதிரை இருந்தது. அது ஒருவருக்கும் அடங்கவில்லை. அதனால், அதனை அடக்கி ஓட்டுபவரைப் பரிசு வழங்கிப் பாராட்டுவதாகவும், தோல்வி யுறுவாரைச் சிறை செய்வதாகவும் பாதுஷா விளம்பரம் செய்வித்தார். வெற்றியை விரும்பிச் சென்றவரெல்லாம், தோல்வி யுற்றுச் சிறைப்படுத்தப் பட்டார்கள். அவ்வாறு சிறைப் பட்டவர்களில் தரணி சிங்கும் ஒருவன்.

தரணி சிங்குக்குச் சிங்கக்குட்டி போன்ற சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் தேசிங்கு. தரணி சிங்கு சிறை சென்றபோது தேசிங்கு சிறிய குழந்தை. அரசி, அப்பொழுது அரசியல் காரியத்தைத் தானே மேற்கொண்டு, தன் மைந்தனையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தாள்.

ஆண்டுகள் சென்றன. தேசிங்கு வளர்ச்சியுற்றான்; காளைப் பருவத்தை யடைந்தான். தன் தந்தை சிறைப் பட்டிருப்பதை யுணர்ந்தான்; 'புலிக்குப் பிறந்தது பூனையாமா?' தந்தையின் மானங் காக்கத் துணிந்

தான்; அதுவே தனது கடமை என்பதையறிந்தான்; தனது அன்னையிடம் விடை பெற்றுக்கொண்டு டில்லி சென்ருன்; அங்கு மயிலாசனத்தில் அமர்ந்திருந்த பாதுஷாவைக் கண்டான். 'யான் தங்களிடமுள்ள அடங்காக் குதிரையை அடக்குவதற்கு வந்தேன்' என்று உரைத்தான். பாதுஷா அக்குதிரையை அடக்குவதற்கு அவனுக்கு ஆணையிட்டார்.



தேசிங்கு குதிரையின்மீது பாய்ந்தேறி, அதன் முரட்டுத்தனம் முழுதும் அடங்க, நெடுநேரம் களைப்பில்லாது சவாரி செய்து, வலமாகச் சுற்றி வந்து நின்ருன்.

ஒருவருக்கும் அடங்காத அக்குதிரை தேசிங்கினிடம் அடங்கிவிட்டது. அவ்வீரனின் திறமையைக் கண்ட பாதுஷா அவனுக்கு அக்குதிரையைக் கொடுத்துவிட்டார்; தரணிசிங்கையும் சிறையி

னின்று விடுவித்தார். அவன் கப்பம் கட்டாது சுயேச்சையாக இருக்கும்படி உரிமையும் வழங்கினர்.

தேசிங்கு தன் தந்தையுடனும், பரிசுகளுடனும் ஊர் வந்தடைந்து தன் தாயாரை வணங்கினன். மகனது வெற்றியைக் கண்ட தாய் பெருமகிழ்ச்சி யுற்ருள். தரணிசிங் சில நாட்களில் காலமாயினன். தேசிங்கு பட்டம் பெற்று அரசனுயினன்.

செஞ்சியிலிருந்து வழக்கம்போல் கப்பம் வராததைக் கண்ட ஆற்காட்டு நவாபு சினங்கொண்டான்; கப்பம் வாங்கி வருமாறு வீரர் சிலரைச் செஞ்சிக்கு அனுப்பினன். நவாபின் ஆணையைக் கேட்ட தேசிங்கு திகைப்பும், சினமுங்கொண்டான். டில்லி பாதுஷாவால் தனக்கு வழங்கப்பட்ட உரிமையைக் கூறினன்; தான் ஒருவருக்கும் தலை வணங்காதவன் என்றும் போர்க்களத்தில் சந்திக்கலாம் என்றும் நவாபுக்குச் சொல்லி அனுப்பினன்.

சில நாட்களில் நவாபின் படைகள் வந்து திடீரெனச் செஞ்சியை வளைத்துக்கொண்டன. போர் முரசைக் காதில் கேட்டான் தேசிங்கு; உடனே தன் படைத் தலைவனும், உயிர்த் தோழனுமாகிய மகமத்கானுக்கு முற்றுகையை அறிவித்தான்.

அச்சமயம் மகமத்கான் மணமகனுக விளங்கினன்; மன்னவன் ஆணையை நிறைவேற்றுவதே தன் கடமையெனக் கொண்டான்; வீரமோடு தன் படைகளுடன் சென்று கடும் போர் புரிந்தான். நவாபின் படைகள் யாவும் சின்னுபின்னமாகச் சிதறியோடின. மகமத்கான் தன் வெற்றியை மன்னனுக்கு அறிவிக்க

மகிழ்ச்சியுடன் வந்தான்; வழியில் மறைந்திருந்த வஞ்சகன் ஒருவனது வாளுக்கு இரையாஞன்.

அந்நிகழ்ச்சியைக் கேட்டான் தேசிங்கு; மனம் பதைத்தான். "தோழனைக் கொன்ற கொடியனை வெல்வேன்; தோழனைக் காண விண்ணகம் செல்வேன்" என்று கூறி, வீராவேசத்துடன் போர் புரிந்து, எஞ்சிய படைகளைப் பஞ்சுபோற் பறந்தோடச் செய்தான். நண்பன் இல்லாது தனித்திருத்தலை விரும்பாது தன் வாளால் தன்னையே குத்திக்கொண்டு உயிர் துறந்தான்.

அரசன் இறந்ததைக் கேட்ட அரசியும் தீயில் வீழ்ந்து தன் கணவனை அடைந்தாள். தேசிங்கின் உண்மையான வீரத்தையும், நட்பின் பெருமையையும், அரசியின் கற்பின் மேம்பாட்டையும் கண்ணுற்ற நவாபு தன் அறியாமைக்கு மிகுதியும் வருந்தினான். அன்று முதற்கொண்டு அவ்விடத்திற்கு இராணிப் பேட்டை என்று பெயராயிற்று.

### வினக்கள்

1. தேசிங்கு தன் கடமையை எவ்வாறு நிறைவேற்றினன்?
2. மகமத்கான் ஓர் உயரிய நண்பன். எவ்வாறு?
3. தேசிங்கின் வீரத்தினையும், அன்பினையும் விளக்கும் நிகழ்ச்சியைக் கூறுக.
4. செஞ்சி, இராணிப் பேட்டையென வழங்கப்படுவதேன்?

### பயிற்சி

1. பின் வரும் சொற்களை வைத்து வாக்கியம் அமைக்க:

   கடமை, பிறந்தது, விடைபெற்று.

2. எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் கூறுக:

   (1) தேசிங்கு தந்தையை விடுவித்தான்.
   (2) அவன் அக்குதிரையை அடக்கினன்.

---

# 10. ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு

| | | | |
|---|---|---|---|
| சிதறி | சிரமேல் | காரியம் | அரசப்புரு |
| பறக்க | கட்டளை | சஞ்சாரம் | களைப்புற்று |
| பதறுத | தடாகம் | மயில்கள் | துணிந்தவன் |
| அருகே | தலைவிதி | விரித்தால் | அவசரப்பட்டு |
| சிதறுது | குளிர்ந்த | வேடர்கள் | கவரக்கூடியது |
| அருந்து | ரீங்காரம் | வண்டுகள் | ஒன்றுபட்டால் |
| அடர்ந்த | ஒற்றுமை | ஆராய்ந்து | சித்திரக்கிரீவன் |

வடக்கே வெகுதூரத்தில் அடர்ந்த வனம் ஒன்றிருந்தது. அவ்வனத்தில் மனித நடமாட்டமே கிடையாது. அங்கே வண்டுகள் ரீங்காரம் செய்வதும், குயில்கள் பாடுவதும், மயில்கள் ஆடுவதும் மனதைக் கவரக்கூடியனவாய் இருந்தன. ஏராளமான புருக்கள் அங்கு வசித்து வந்தன. அப்புருக்களுக்கு ஓர் அரசன் உண்டு. அவ்வரசப் புருவுக்குச் சித்திரக்கிரீவன் என்று பெயர். மற்றப் புருக்கள் யாவும் அரசன் கட்டளையைச் சிரமேற்கொண்டு சிறிதும் தவறாது நடந்து வந்தன. அரசப் புரு தன் குடிகளாகிய புருக்களுக்கு வேடர்களாலும், மற்ற விரோதிகளாலும் யாதொரு தீங்கும் நேரிடா வண்ணம் பாதுகாத்து வந்தது.

வேட்டையாடிப் பிழைத்து வந்த வேடுவனொருவன், ஒரு நாள் அவ்வனத்தை அடைந்தான்; அங்கே புருக்கள் கூவும் ஓசையைக் கேட்டு, 'இன்று நல்ல வேட்டை கிடைக்கும்' என்று மகிழ்ச்சியடைந்தான்; 'இந்த இடத்தில் சிறந்த மரங்களும், குளிர்ந்த நிழலும், அருகே பரந்த தடாகமும் இருக்கின்றன. இப்பொழுதோ வெயில் அதிகமாயிருக்கிறது. புருக்

கள் நிழலில் தங்குவதற்கும், நீர் அருந்துவதற்கும் இங்கு வரக்கூடும். இவ்விடத்தில் வலையை விரித்தால் ஏராளமான புறாக்களைப் பிடிக்கலாம்.' என நினைத்தான்.

தான் நினைத்த வண்ணம் தடாகத்தினருகே வலையை விரித்தான்; அதன் மீது தானியங்களைத் தூவினான்; ஒரு மரத்தின் பின்னே ஒளிந்து கொண்டான். அவன் நினைத்தவாறே புறாக்கள் மிகப் பசியோடு அம்மரத்தின் கிளைகளில் வந்து உட்கார்ந்தன. அவைகள் கீழே சிதறிக் கிடக்கும் தானியங்களைக் கண்டன; 'இன்று நமக்கு நல்ல உணவு இருக்கின்றது' என்று மகிழ்ச்சி கொண்டன.

அதை அறிந்த புறா அரசு, மற்றப் புறாக்களைப் பார்த்து, "எந்தக் காரியத்தையும் ஆராய்ந்து செய்ய வேண்டும். அவசரப்பட்டு எதையும் செய்யலாகாது. இதுவோ மனித சஞ்சாரமில்லாத வனம். இங்கே தானியங்கள் சிதறிக் கிடப்பது ஆச்சரியமாக இருக்கிறது. இதில் ஏதோ சூது இருக்கவேண்டும். பதறாத காரியம் சிதறாது. அவசரப்படாதீர்கள். பார்த்துச் செய்வோம்" என்று கூறிற்று.

அதைக் கேட்டதும் கர்வங் கொண்ட புறாவொன்று, "இவ்விதம் நாம் யோசித்துக் கொண்டிருந்தோமானால் நம்முடைய பசி எவ்வாறு தீரும்? துணிந்தவனுக்குத் துக்கமில்லை. எடுத்ததற்கெல்லாம் சந்தேகமுற்றால் என்ன நடக்கும்! வாருங்கள் போவோம்" என்று சொல்லிக் கொண்டு பறந்தது. மற்றப் புறாக்களும் அதனுடன் பறந்து போய்த் தானியங்களைத் தின்னத் தொடங்கி, வலையில் அகப்பட்டுக் கொண்டன. அதைப் பார்த்த புறா அரசு,

'குடிகளெல்லாம் போன பின் நாமிருந்து என்ன பயன்?' என நினைத்துத் தானும் அவைகளுடன் சென்று வலைக்குள் அகப்பட்டுக்கொண்டது.



அப்பொழுது புறவரசு மற்றப் புறுக்களைப் பார்த்து, "அறிவில்லாத புறுக்களே, நான் கூறியதைக் கேட்டிருந்தால் இந்த ஆபத்து நேர்ந்திராதே; இப்பொழுது வேடனோ, நம் எல்லோரையும் கொல்லப் போகிறான். நம் தலைவிதி எவ்வாறாகுமோ தெரியவில்லை. இனிமேலாவது என் சொல்லைக் கேட்பீர்களா?" என்றது. மற்றப் புறுக்கள், "தங்கள் கட்டளைப்படி நடக்கிறோம்" என்றன. அதன் பிறகு புறவரசு, "நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து முழுப் பலத்தோடு வலையைத் தூக்கிக்கொண்டு பறந்து செல்ல வேண்டும்" என்று கூறிற்று. உடனே புறுக்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து வேடனின் வலையைத் தூக்கிக்கொண்டு வெகு வேகமாக மேலே பறந்தன.

ஒளிந்திருந்த வேடன் ஓடிவந்தான்; புருக்கள் வலையுடன் பறந்து செல்வதைக் கண்டான்; பின் தொடர்ந்து ஓடினான். புருக்கள் வெகு தூரம் பறந்து போய்விட்டன. வேடனோ ஓட முடியாமல் களைப் புற்று நின்று விட்டான். "வலையையும் இழந் தேனே!" என்று வருந்தி வீட்டுக்குத் திரும்பினான்.

பிள்ளைகளே, ஒற்றுமைக் குறைவினால் புருக்கள் அடைந்த கஷ்டத்தையும், பின்னர் ஒற்றுமையினால் அவைகள் தப்பிப் பிழைத்ததையும் பார்த்தீர்களா!

"ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு; நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு" என்பதைக் கவனியுங்கள்.

### வினாக்கள்

1. அரசப் புருவுக்குப் பெயர் என்ன? அது தன் குடிகளுக்குச் செய்த நன்மைகள் எவை?
2. வேடன் எங்கே வலையை விரிக்கத் தீர்மானித்தான்?
3. வனத்தில் சிதறிக் கிடந்த தானியங்களைக் கண்ட அரசப் புரு என்ன சொல்லிற்று?
4. புருக்கள் எதனால் வலையில் சிக்கின? எப்படித் தப்பின?

### பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:

(1) புருக்கள், 'தங்கள் ——— நடக்கிறோம்' என்றன.

(2) புருக்கள் வெகு தூரம் ——— போயின.

2. திணைகளைக் கூறுக:

வேடன், புரு, எலி, வலை, மனிதர், தங்கை, பசு.

3. ஆண்பாலுக்குப் பெண்பால் கூறுக:

தந்தை, மகன், அவன், தம்பி, பால்காரன், தேவன்.

# 11. வேளாண்மை

| | | | |
|---|---|---|---|
| சீர் | உபகாரி | உற்பத்தி | அறுவடை |
| சாரம் | கதிர்கள் | நிமித்தம் | விவசாயம் |
| உரிய | ஊதியம் | செவ்வை | கையாண்டு |
| வறிய | எருக்கள் | பாட்டாளி | வேளாண்மை |

வேளாண்மை என்பது பயிர்த்தொழிலாகும். வேளாண்மைத் தொழில் செய்வோர் வேளாளர் என்று சொல்லப்படுவர். இவ்வேளாண்மைத் தொழில் எல்லாத் தொழில்களையும் விடச் சிறந்த தொழில்; மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில். நமது நாட்டில் வாழ்ந்த நமது முன்னோர்கள் இத் தொழிலைச் சிறப்பாகக் கையாண்டு வந்திருக்கின்றார் கள். இதனாலே 'சீரைத் தேடின் ஏரைத்தேடு' என் பது போன்ற வாக்கியங்கள் தோன்றலாயின.

வேளாண்மை என்பதற்கு உபகாரம் என்பது பொருளாகும். வேளாண்மை செய்வோர் உலகத்தார்க்கு உணவளிக்கும் உபகாரிகளாக விளங்குகின்றனர். நமது நாடு பெரும்பாலும் விவசாய நாடாகவே யிருந்து வந்திருக்கிறது. ஆயினும், விவசாயஞ் செய்யப்படும் அளவுக்குத் தக்க பலனை விளைநிலம் கொடுப்பதில்லை. விவசாயிகளுடைய உழைப்பும் குறைவாகவேயிருக்கின் றது. ஏனெனில் நிலத்துக்குரிமை யுடையோர் தமது பாட்டாளி மக்களுக்குத்தக்க ஊதியம் கொடுப்பதில்லை; அவர்களுக்கு வயிறார உணவுங் கொடுப்பதில்லை. இத னால் உண்ணவும், உடுக்கவும் போதிய வருவாய் இல் லாத எளிய விவசாயிகள் வறுமையில் ஆழ்ந்திருக்கின் றனர். இவைகளால் வேளாண்மைத் தொழில் தக்க

முயற்சியில்லாது போயிற்று. அவ்வாறு போகவே, நிலத்தின் அளவுக்குத் தக்க பயனில்லாது போயிற்று. இக்காரணங்களால் வேளாண்மை கீழ்நிலையுற்றது.

வேளாண்மைத் தொழில் சிறப்படைவதற்கு முதலில் உழவுத் தொழிலைச் சீர்திருத்த வேண்டும். உழவுக்குரிய கருவிகள், ஆழமாக உழுவதற்கு ஏற்ற விதமாகப் பெரியனவாயும், ஒரே சாலில் ஆழமாகப்போகக் கூடியனவாயும் இருக்கவேண்டும். 'அகல உழுவதைவிட ஆழ உழ வேண்டும்' என்பது பழமொழியல்லவா?

வேளாண்மைத்தொழில் செய்வதற்கு நிலத்தைச் செவ்வையாக உழுதால் மட்டும் போதாது. அந்நிலத்தில் விதைக்கும் விதைகளும் நல்லவைகளாய் இருக்க வேண்டும். நம்மவர்கள் விதையைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. அறுவடையான பிறகு, அறுத்த தானியங்களை யெல்லாம் விற்றுவிட்டு, பருவகாலத்தில் விதையை விலைகொடுத்து வாங்கி விதைக்கின்றனர். இதனால் நல்ல விதை கிடைப்பதில்லை.

அறுவடை காலங்களில் நன்றாக முற்றி, மணிகள் பருத்திருக்கும் கதிர்களாக அறுத்தெடுத்து, வேறாக வைத்துக்கொள்ள வேண்டும்; விதைக்கும் காலங்களில் நல்ல விதைகளைத் தேர்ந்து எடுத்து விதைக்க வேண்டும். இவ்வாறு விதைப்பதுடன் உரிய காலங்களில் தகுதியான நல்ல எருக்களையும் மண்ணில் போட்டு வரவேண்டும். அப்படிச் செய்தால் தான் பயிர் செழித்து வளர்ந்து மிகுந்த பயனைத்தரும்.

எருக்களில் பலவகை யுண்டு. அவை ஆடுமாடு முதலிய கால் நடைகளின் சாணங்களும், சாம்பலும்,

குப்பைகளும், அழுகிப்போன இலை தழைகளுமாம். நாட்டுப் புறங்களில் உள்ள ஒவ்வொரு வீட்டின் புறத்திலும் குழி வெட்டி, அதில் ஆடுமாடுகளின் சாணங்களையும், அவை கழிக்கும் வைக்கோல்களையும், வீட்டுக்குப்பைகளையும் கொட்டி வைத்திருப்பார்கள்.



பருவகாலங்களில் இந்தக் குழிகளில் இருக்கும் உரங் களை எடுத்து நிலத்தில் சேர்ப்பார்கள். அவை மண் ணோடு கலந்து விடும். பின் அந்நிலத்தில் முளைக்கும் பயிர்கள் எருக்களின் சாரத்தைத் தமது சல்லி வேர் களின் உதவியால் கவர்ந்து கொள்ளும்.

நல்ல எருவில்லையேல் விதைக்கும் விதைகளி லிருந்து நல்ல பயனை எதிர்பார்க்க முடியாது. பின்னர் காலந்தவறாது பயிர்களுக்கு நீர்பாய்ச்சிப் பாது காத்து வரவேண்டும். இதனாலே நமது பெரியோர்கள், 'உழுவதோடு நல்ல எருவிடுதல் சிறந்தது. இவ்விரண்

டும் செய்தபின் களைபிடுங்குதல் வேண்டும். களைபிடுங்கு வதோடு பயிரைக்காத்தல் நல்லது' என்று கூறியிருக் கிறார்கள்.

இவ்வாறு நமது நாட்டில் பயிர்களின் உற் பத்தியைப் பெருக்க முயல வேண்டும். வேளாண்மை வளர்ச்சியடைந்தால் நாடு செழிக்கும்.

## வினாக்கள்

1. பயிர்த்தொழில் மிகவும் சிறப்புற்ற தொழில். எவ்வாறு?
2. விவசாயத்தில் மக்கட்கு ஊக்கம் குன்றியது ஏன் ?
3. வேளாண்மைத் தொழில் சிறப்புறச் செய்ய வேண்டுவன யாவை ?
4. எவ்வாறு எருவிடுதல் வேண்டும் ?

## பயிற்சி

1. பொருள் கூறுக:

பாடு, சீர், ஊதியம்.

2. 'உழவன் உழுதான்' இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொல்லையும், வினைச்சொல்லையும் கவனி. உழுதான் என்பது தொழில் முடிவு பெற்ற சொல்லாக இருக்கிறது. இவ்வாறு வாக்கி யத்தில் முடிவு பெற்ற சொல்லாக வருவது பயனிலை. உழவன் என்ற பெயர் அவ்வினையைச் செய்தவன் இவன் எனக் கூறுகிறது. இவ்வாறு வருவது எழுவாய்.

பின்வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலைகளைக் கூறுக:

1. மாடுகள் ஓடுகின்றன.
2. பயிர் வளர்ந்தது.
3. நான் படித்தேன்.

# 12. புகைவண்டிப் பிரயாணம்

| | | | |
|---|---|---|---|
| திசை | நிலையம் | அமர்தல் | குற்றவாளி |
| ஓலம் | சந்திப்பு | மார்க்கம் | புகுந்தேன் |
| அறிகுறி | வெப்பம் | தண்டனை | பிரயாணம் |

நான் ஒரு சமயம் மதுரையினின்றும் புறப்பட்டுத் திண்டுக்கல்லுக்குப் போக நேர்ந்தது. எனது பெட்டியை எடுத்துக் கொண்டு மதுரைப் புகைவண்டி நிலையத்திற்குச் சென்றேன். அது இராமேஸ்வரம், தூத்துக்குடி, திருவனந்தபுரம், சென்னை முதலிய இடங்களுக்குச் செல்லும் பெரிய சந்திப்பு நிலையம். அங்கே பல இருப்புப் பாதைகள் ஒன்று கூடுகின்றன.

நான் சீட்டுக் கொடுக்கும் இடத்திற்குச் சென்றேன். பெருங் கூட்டமாய் இருந்தது. நான் மிகுந்த இடியுண்டு பணத்தைக் கொடுத்துச் சீட்டு வாங்கிக் கொண்டேன். பிறகு எனது பெட்டியைத் தூக்கிக் கொண்டு நிலையத்துட் புகுந்தேன். போகும் வழியில் ஒருவர் என் சீட்டை வாங்கிப் பார்த்து, ஓரத்தில் சிறிது கத்திரித்துக் கொடுத்தார்.

நான் ஏறிச்செல்ல வேண்டிய வண்டி எங்கே வந்து நிற்கும் என்று அங்கு வந்த ஒருவரைக் கேட்டேன். அவர் 'பாலம் ஏறிப் போகவேண்டும்' என்று கூறி, ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினார். அங்கே ஒரு பலகை தொங்கவிடப்பட்டிருந்தது. அதில் ஒவ்வொரு ஊருக்கும் செல்லும் வண்டிகள் நிற்கும் இடங்கள் குறிக்கப்பட்டிருந்தன.

நான் பாலமேறிச் சென்று வண்டி வந்து நிற்கும் இடத்தை அடைந்தேன். அங்கே பெருங் கூட்டமாயிருந்தது. பழங்கள், மிட்டாய்கள், பத்திரிகைகள் விற்போர் இடும் சத்தமும், குழந்தைகள் மகிழ்ச்சியால் போடும் கூக்குரலும் கலந்து ஒரே முழக்கமாயிருந்தது.

சிறிது நேரம் ஆனவுடன் ஒரு வேலைக்காரன் மணியடித்தான். மணியடிப்பது வண்டி வருவதைத் தெரிவிக்கும் அறிகுறியாகும். நான் வண்டி வரும் திசையை நோக்கினேன். சிறிது தொலையிலிருந்த கைகாட்டி மரத்தின் கை சாய்க்கப்பட்டிருந்தது. வண்டியும் வந்தது.

வண்டியில் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு, மூன்றும் வகுப்பு வண்டிகள் இருந்தன. முதல் இரண்டு வகுப்பு வண்டிகளில் மெத்தைகள் இடப்பட்டிருந்தன. அவை அழகாக இருந்தன. அவைகளில் பிரயாணம் செய்வதானல் அதிகப் பணம் கொடுக்க வேண்டும்; அவை செல்வர்களுக்குத் தகுதியானவை.

நான் மூன்றும் வகுப்பு வண்டியில் ஏறிக்கொண்டேன். பிறகு அவ் வேலைக்காரன் மறுபடியும் மணி அடித்தான். வண்டிப் பாதுகாப்பாளர் பச்சைக் கொடியைக் காட்டினார். வண்டி ஒலமிட்டுக் கொண்டு புறப்பட்டது.

இடையில் உள்ள நிலையங்களில் கொடைக்கானல் ரோடு பெரியது. அது முன்னே, 'அம்மைய நாயக்கனூர்' என்று சொல்லப்பட்டது. அங்கே வண்டி சுமார் கால் மணி நேரம் நின்றது. மற்ற நிலையங்களைவிட, அங்கே பிரயாணிகள் அதிகமாக இறங்கினார்கள். நான் சென்ற காலம் கோடைக்காலம். வெப்பத்

திற்காற்ருது குளிர்ச்சியின் பொருட்டுக் கொடைக்கானல் மலைக்குச் செல்வோர் அந்த நிலையத்தில் தான் இறங்கிச் செல்லவேண்டும். இன்ப வாழ்க்கையைக் கருதிய திரண்ட செல்வர்கள் பலரும் தங்கள் மனைவி மக்களோடு கூட்டங் கூட்டமாக இறங்கிச் சென்ருர்



கள். அந்த நிலையம் சிறு மலை முதலிய மலைகளை அடுத்துள்ளது. ஆதலால், அங்குப் பல வகையான பழங்களும், பூக்களும், தின்பண்டங்களும் விற்பனைக்கு வந்திருந்தன.

கடைசியாக, வண்டி திண்டுக்கல் வந்து சேர்ந்தது. திண்டுக்கல் ஒரு சந்திப்பு நிலையம். பழனி மார்க்கமாக மலையாளம், கோயம்புத்தூர் முதலிய இடங்களுக்குச் செல்லும் இருப்புப் பாதை அங்கு சந்திக்கின்றது. நான் வண்டியைவிட்டு இறங்கிப் பாலத்தின் வழியாக வெளியே சென்றேன். வழியில் ஒருவர் நின்று பிரயாணச் சீட்டுகளை யெல்லாம் வாங்கிக் கொண்டிருந்தார். நான், எனது சீட்டைக் கொடுத்துவிட்டு, நிலையத்திற்கு வெளியே சென்றேன். அங்கு ஒரு வாடகை வண்டியை அமர்த்திக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தேன்.

## வினுக்கள்

1. கொடைக்கானல் எவ்வகையில் சிறப்புற்றது?
2. நீ செய்த பிரயாணத்தைப் பற்றி ஓர் கட்டுரை வரைக.
3. புகைவண்டி நிலயத்தில் எவ்வாறு வேலே நடைபெறுகிறது?

## பயிற்சி

சொற்களே வைத்து வாக்கியம் அமைக்க:

*அழகாக, அவ்வாறு, செல்வோர், தெரிவிக்கும்.*

எழுவாய்க்கேற்ற பயனிலேயைச் சேர்க்க:

| | |
|---|---|
| வேலேக்காரன் | கூடுகின்றன |
| நான் வண்டி வருவதைப் | நின்றது |
| பல இருப்புப் பாதைகள் | பார்த்தேன் |
| வண்டி கால்மணி நேரம் | மணியடித்தான் |

(1) வேலேக்காரன் மணியை அடித்தான்.

(2) அவன் நண்பனேப் பார்த்தான்.

இவ்வாக்கியங்களில் முதலிலுள்ள 'வேலேக்காரன்' 'அவன்' என்பன எழுவாய்கள். முடிவிலுள்ள 'அடித்தான்' 'பார்த்தான்' என்பன பயனிலேகள். இவற்றைத் தவிர, தடித்த எழுத்தில் இரண்டிலும் இரண்டு சொற்கள் இருக்கின்றன. எதை அடித்தான்? யாரைப் பார்த்தான்? என்ற வினுக்களுக்கு விடைகளாக அச் சொற்கள் அமைகின்றன. அதாவது பயனிலேயாக வரும் செயலின் பயனே அடைந்த பொருளாகும். இவ்வாறு வருவது செயப்படு பொருள் எனப்படும்.

எழுவாய், பயனிலே, செயப்படு பொருள் கூறுக:

(1) நான் வண்டி வரும் திசையை நோக்கினேன்.

(2) பாதுகாப்பாளர் பச்சைக் கொடியைக் காட்டினுர்.

---

# 13. தமிழ் வீரர்

| | | | |
|---|---|---|---|
| வீறு | சிந்தனை | வையம் | அண்டுமோ |
| இசை | ஆலயம் | பேரிகை | திருப்படை |
| குரிசில் | ஒப்புயர் | முழக்கம் | துடிதுடித்து |
| வாகை | நானிலம் | அதிசயம் | தேறுவோம் |
| ஒக்கும் | பராபரன் | பூணுதல் | பழுதாகுமோ |
| துங்கம் | கொற்றம் | தொண்டர் | கொந்தளிக்கும் |

செந்தமிழ் மொழி தந்த பராபரன்
சிந்தனை — யுடன் — முந்துவோம்.
கொந்த ளித்திடும் வீறுடன் பேரிகை
கொட்டுங்கள் — விண்ணை — எட்டவே. 1

வையம் எங்கும் தமிழ் முழக் கம் செய்ய
வாருங்கள் — ஒன்ருய்ச் — சேருங்கள்.
கைகள் செந்தமிழ் ஆலயங் கட்டிடக்
காணுங்கள் — வெற்றி — பூணுங்கள். 2

தேனின் இனிய தெய்வத் தமிழ்இசை
தேறுவோம் — நலம் — கூறுவோம்.
நானி லத்திலும் தாயின் மணிக்கொடி
நாட்டுவோம் — வீரம் — காட்டுவோம். 3

துங்க மான தமிழ்மொழி யாவிற்கும்
தொன்மொழி — பூவின் — முன்மொழி.
தங்க மான தமிழ்மொழி நம்திருத்
தாய்மொழி — தேவர் — வாய்மொழி. 4

கொற்ற வீரக் குரிசில்கள் யாவரும்
கூடுவோம் — வாகை — சூடுவோம்.
ஒற்றுமை யுடன் ஒக்கும் புதுத்தமிழ்
உலகினைச் — செய்வோம் — இலகவே. 5

துள்ளித் துள்ளித் துடிதுடித் தன்புசெய்
தொண்டர்முன் — பகை — அண்டுமோ ?
வெள்ள மாகப் பெருகும் சுதந்திர
வேகமும் — பழு — தாகுமோ ? 6

துணிந்த வீரத் தமிழர் திருப்படை
தூங்கவோ — பின் — வாங்கவோ ?
அணிந்த போரின் அதிசய வெற்றிகள்
ஆக்குவோம் — கொடி — தூக்குவோம். 7

— யோகி சுத்தானந்த பாரதியார்.

### வினுக்கள்

1. தமிழ்ப் பெரும் வீரர் செய்யவேண்டும் பணிகள் யாவை?
2. தமிழ் மொழி எத்தகையது?
3. தமிழர் திருப்படை எப்படிப்பட்டது?

சொற்பொருள்:— பராபரன் - கடவுள், வீறு - வீரம், விண் - ஆகாயம், தொன்மொழி - பழமையான மொழி, நானிலம் - பூமி.

---

# 14. குருடர்கள் கல்வி கற்றல்

| | | | |
|---|---|---|---|
| முடிவு | சட்டை | உணர்வு | பொதுநலம் |
| உதவி | வியப்பு | பெருக்க | பள்ளிச்சாலை |
| உளம் | எழுச்சி | இலவசம் | பேரானந்தம் |
| வாக்கு | அரும்பு | நாணயம் | பரோபகாரம் |
| பதிக்க | போன்ற | பெருக்கம் | மாலைப்பொழுது |

நமது உடம்பிலுள்ள உறுப்புக்களில் மிகவும் முக்கியமானது கண். அத்தகைய கண் இல்லாதவன் குருடன். அவன் மற்றவர்களைப் போல் தனக்கு வேண்டிய எல்லா நலங்களையும் தானாகவே தேடியடைய முடியாதவனாக இருக்கின்றான். ஆகவே குருடனைக் கண்டால் யாவரும் இரக்கம் காட்ட வேண்டும். அவனும் மனிதனாக வாழ வழி செய்வது சிறந்த பொதுநலத் தொண்டாகும்.

ஒரு காலத்தில் தரும சிந்தனையுள்ள அறிஞர் ஒருவர் இருந்தார். அவர் யாவரையும் நேசிப்பார்; எளியவர்களுக்குத் தம்மாலான உதவி செய்வார். அவர் ஒரு நாள் மாலைப்பொழுதில் உலாவச் சென்றார். வழியில் ஒரு குருடனைக் கண்டார். அவன் ஒரு பிச்சைக்காரன். அவனைக் காணவும் அப்பெரியாருக்கு மனம் இளகிவிட்டது. உதவி செய்ய நினைத்து, தமது சட்டைப் பையிலிருந்த ஒரு நாணயத்தை எடுத்து அவனுக்குக் கொடுத்துச் சென்றார்.

அவ்வறிஞர் சிறிது தூரஞ்சென்றதும், அக் குருடன் அவரை, "ஐயா, ஐயா" என்று கூவி அழைத்தான். அவர் திரும்பி வந்து, அக்குருடனைப் பார்த்து, "என்னப்பா! ஏன் அழைத்தாய்?" என்று

அன்புடன் கேட்டார். குருடன், "என்ன ஐயா! அரை ரூபாயை அல்லவோ நீங்கள் தவறுதலாகக் கொடுத்துவிட்டீர்கள்! இதை நீங்கள் காலணா வென்று நினைத்தீர்கள் போலும்!" என்று சொல்லி அந்த அரை ரூபாயை அவரிடம் கொடுத்தான்.

அறிஞர் அந்த எளிய பிச்சைக்காரனாகிய குருடனது உண்மையையும், அறிவையும் எண்ணி வியந்து, "தம்பி, இதை நீ எவ்வாறு அரை ரூபாய் என்று தெரிந்து கொண்டாய்?" என்று வினவினார். அதற்கு அந்தக் குருடன், "என்ன ஐயா! இதைத் தெரிந்து கொள்ளக் கூடாதா? நான் கையினாலே தடவிப் பார்த்தேன்; சுற்றிலுமுள்ள அரும்பினால் அரை ரூபாய் என்று தெரிந்து கொண்டேன்" என்றான்.

இது அறிஞருக்குப் பெருவியப்பை உண்டாக்கி விட்டது. அவன் குருடனாய் இருப்பினும், அவனது அறிவுப் பெருக்கத்தையும், செயலையும் பற்றி ஆழ்ந்து சிந்தித்தார். 'வெளிப் பொருள்களைக் காண்பதற்குரிய கண்ணில்லாது போயினும், அவனது அறிவுக்குக் குறைவு இல்லை. உறுப்புக்களில் ஒன்று குறையின், மற்ற உறுப்புகளுக்கு வளம் மிகும் என்று சொல்லப்படும். அதை நாம் இப்பொழுது கண்ணாரக் கண்டோம். இவன் தடவிப் பார்த்தே நாணயங்களின் வேறுபாடுகளை யுணர்வானானால், அதுபோலவே எழுத்துக்களையும் எண்களையும் ஏன் தடவிப் பார்த்தே யறிந்து கொள்ளக் கூடாது? எழுத்துக்களும், எண்களும் சிறிது எழுச்சியாகப் பதிக்கப்பட்டிருந்தால், அவைகளை ஒருவன் தனது கையால் தடவிப்பார்த்தே தெரிந்து கொள்ளக்கூடும் என்று அறிந்துகொண்டார்.

அறிஞர் இவ்வாராய்ச்சியைத் துணையாகக் கொண்டு, கண்ணில்லாத குருடர்களுக்கெல்லாம் கல்வி கற்றுக் கொடுக்கலாம் என்ற முடிவிற்கு வந்தார். எழுத்துக்களை யெல்லாம் சிறிது எழுச்சியாகப் பலகையிலே பதியவைத்து, ஒரு ஏழைக் குருடனுக்குக் கற்பித்தார்.

அக் குருடனும் அவ்வெழுத்துக்களைத் தடவித் தடவிப் பார்த்தே தெரிந்து கொண்டு வாசிக்கலானன். அவனது செயல் அப்பெரியாருக்குப் பின்னும் பெருமகிழ்ச்சியை யுண்டு பண்ணிற்று.

பெரியார் தமது முயற்சியில் வெற்றி கண்டார்; பேரானந்தங் கொண்டார்; உலகத்திற்குப் பேருதவி புரிய உளங்கொண்டார். குருடர்களுக்கெல்லாம் ஒரு பள்ளிக்கூடம் அமைத்துக் கல்வி கற்பிப்பதற்கு அவர் எண்ணினர்; அக்குருடனை யழைத்துக்கொண்டு ஊரூராய்ச் சென்றார்; பல செல்வர்களைக் கண்டார்; அவர்களுக்குத் தாம் கண்டறிந்த உண்மைகளை எடுத்துரைத்தார். பரோபகாரச் சிந்தையுடைய சிலர் அப்பொதுநலத்தொண்டுக்கு உதவுவதாக வாக்களித்தனர்; பெரும்பொருள் தந்தனர்.

அப்பெரியார் அப்பொருள்களை யெல்லாம் ஒன்று சேர்த்து, ஒரு சிறிய பாடசாலை யமைத்தார். தமது நகரத்தில் அலைந்து திரியும் குருடர்கள் எல்லோரையும் வரவழைத்து, அப்பள்ளியில் இருந்து கல்வி கற்றுக் கொள்ளுமாறு செய்தார். அவர்களுக்கு உணவும் உடையும் இலவசமாகக் கொடுக்கப்பட்டன. சில நாட்களுக்குப் பிறகு, சிறிய குடிசைத் தொழில்களிலும் அவர்களைப் பழகும்படி செய்தார். இவரது

முயற்சி நாளடைவில் நாட்டுக்குப் பெரிதும் உதவியா யிற்று. இதைப் போன்ற பாடசாலைகள் இப்பொழுது நம் நாட்டில் பலவிடங்களில் நடைபெற்று வரு கின்றன.

அரசியலாரும், பெருஞ்செல்வரும் இதுபோன்ற பொதுநலத் தொண்டுக்கு உதவி செய்து, இவ்வாறான பாடசாலைகளைப் பெருக்க முன் வரவேண்டும்.

### வினாக்கள்

1. குருடன் நல்லியல்பு எவ்வாறு விளங்குகிறது ?
2. குருடன் அரை ரூபாயைத் திரும்பக் கொடுத்ததால் அறிஞர் அறிந்துகொண்ட தென்ன ?
3. அவ்வறிஞர் குருடர்களுக்குச் செய்த உதவிகள் யாவை ?

### பயிற்சி

கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:

1. பரோபகாரிகள் சிலர் அப்பொதுநலத் தொண்டுக்கு —— வாக்களித்து —— தந்தனர்.
2. அவர்களுக்கு உணவும் —— கொடுக்கப்பட்டன.

பிழைகளைத் திருத்துக:

1. அவன் பாடம் படித்தார்.
2. சிறுவர்கள் விளையாடின.
3. யானைகள் வருகின்றது.

———

# 15. சித்திர விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| காளி | வெந்நீர் | மருத்துவர் | பருகுவதால் |
| நோய் | உலர்த்த | வைத்தியர் | தின்பண்டம் |
| அஞ்சி | கிருமிகள் | தண்டோரா | அசுத்தமான |
| காலரா | அசுத்தம் | கொதிக்கும் | ஊசிபோடுதல் |
| சோப்பு | சிற்றுண்டி | சவர்க்காரம் | துன்புறுகின்றுன் |
| மாண்டு | பெரியவர் | முறையிட்டு | மொய்க்கின்றன |

ஒரு காலத்தில் மீனுட்சிபுரம் என்னும் ஊரில் காலரா நோய் பரவியதால் பலர் மாண்டுவிட்டனர். அப்பொழுது அவ்வூரார் அது காளியின் கோபத்தால் ஏற்பட்டதெனக் கருதிக் காளிக்குப் பலியிட்டனர். ஆனுல் நோய் பெருகிற்றே யொழியக் குறையவில்லே. அவர்கள் மிகவும் அஞ்சிப் பக்கத்து ஊரிலுள்ள படித்த பெரியவர்களிடம் சென்று முறையிட்டுக் கொண்டார்கள். அவர்கள், 'காலரா கண்டவுடன் ஏன் சொல்லவில்லே' எனக் கோபித்து அவ் விஷயத்தைக் கிராமாதிகாரிக்குத் தெரியப்படுத்தினர். கிராமாதிகாரி மேலதிகாரிகட்கு அச் செய்தியை அறிவித்தார். அதன் மேல் அரசாங்க வைத்தியர் அவ்வூருக்கு வந்து சுற்றிப் பார்த்து, தண்டோரா மூலம் அவ்வூர்ப் பொது மக்களே ஓர் இடத்தில் கூடும்படி செய்தார். ஊரார் கூடிய பின், வைத்தியர் காலராவின் காரணத்தையும், அந்நோய் கண்ட காலத்தில் மக்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைகளேயும் படங்களின் மூலம் விளக்கிக் கூறினுர்.

வைத்தியர் காட்டிய படங்களேயும் அவர் கூறிய விஷயங்களே யும் படித்துப் பாருங்கள்:




முதற் படம்: ஒரு சிற்றுண்டிக் கடையில் ஒரு சிறுவன் மிட்டாய் வாங்கித் தின்கின்றுன். கடையில் சிற்றுண்டிகள் திறந்து வைக்கப்பட்டிருப்பதால், ஈக்கள் மொய்த்துக் கொண்டிருக்கின்றன.

இரண்டாம் படம்: ஈக்கள் மொய்த்து அசுத்தமான தின்பண்டங்களை வாங்கித் தின்ற பையனுக்குப் பேதி கண்டது. அவன் அந்தக் கடையருகிலேயே வெளிக்குப் போகிறான்.

மூன்றும் படம்: அப் பையன் கிணற்றின் கரையில் சற்று மேடான பக்கத்தில் நின்று குளிக்கிறான். அவன் குளித்த அழுக்குத் தண்ணீர் கிணற்றிற்குள்ளே விழுகிறது. அதனால் கிணற்றுத் தண்ணீரில் காலராக் கிருமிகள் வளர்ந்து பரவுகின்றன. அத் தண்ணீரையே எல்லோரும் பருகுவதால் காலரா, மக்களிடையே பரவுகிறது. ஒரு சிறுவனுக்கு அவன் தாயார் தண்ணீர் இறைத்துக் குடிப்பதற்குக் கொடுக்கிறாள். வேறொரு பெண்ணும் நீரிறைக்கின்றாள்.

நான்காம் படம்: சிறுவன் காலராவால் துன்புறுகின்றான். மருத்துவர் வந்து சிறுவன் நிலையை உணர்ந்து ஊசிபோடுகிறார். அது அந்நோயைத் தீர்க்கும். பேதி வராமல் தடுப்பதற்கும் ஊசி குத்திக் கொள்ளலாம்.

ஐந்தாம் படம்: அதோ பாருங்கள்! பலர் இறந்து கிடக்கிறார்கள். காலராவின் கொடுமைக்கு ஆளானவர்கள். இவர்கள் ஊசி போட்டுக் கொள்ளாதவர்கள்.

ஆறும் படம்: காலராக் கண்டவர்களின் துணிகளைக் கண்ட இடத்தில் போட்டு வைக்கக்கூடாது. ஏனென்றால் அவற்றிலுள்ள கிருமிகள் மற்றவர்களைப் பற்றிக்கொள்ளும். ஆதலால், மருத்துவர் செய்து காட்டுவதுபோல், நோய்கண்டவரது துணிகளைக் கொதிக்கும் வெந்நீரில் போட்டு எடுக்கவேண்டும்.

ஏழாம் படம்: காலராக் கண்டவர்களுடன் பழகுபவர்கள் சவர்க்காரம் கலந்த தண்ணீரில் கைகால்களைக் கழுவிக்கொள்ளவேண்டும். அதோ பாருங்கள்! மருத்துவர் காலராக் கண்டவனுக்கு ஊசி போட்டதால் சவர்க்காரம் கலந்த நீரில் கைகழுவுகிருர்.

எட்டாம் படம்: கிணற்றில் மருந்து போட்டால் அதிலிருக்கும் கிருமிகள் இறந்துவிடும். மருத்துவர் மருந்து போடுகிருர். அதன் அவசியத்தை உணராத மக்கள் அதைத் தடுக்கின்றனர். மருத்துவர் அதன் நன்மையை விளக்கிக் கூறுகிருர்.

ஒன்பதாம் படம்: காலராக் கண்ட சமயத்தில் தண்ணீர், பால் முதலியவற்றைக் காய்ச்சிக் குடிக்கவேண்டும் என்று சொல்லி, வைத்தியர் தண்ணீரைக் காய்ச்சிக் குடித்துக் காட்டுகிருர்.

பத்தாம் படம்: குடிதண்ணீர் எடுக்கும் கிணறுகள், அருகில் அசுத்தம் தேங்காதபடி, கட்டப்படவேண்டும். மேலும், அதன் சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்துக்கொள்ளவேண்டும்.

பதினொன்றும் படம்: கிணற்றை மூடிக் குழாய் மூலம் தண்ணீர் எடுத்துச் சாப்பிடுவது சிறந்தது. இதோ இக்குழாயைப் பாருங்கள். இதில் ஒரு கிருமியும் சேராது.

பன்னிரண்டாம் படம்: நீங்கள் உண்ணும் உணவை இவ்வாறு மூடி வைத்திருந்தால் ஈக்கள் மொய்க்கா; நோயும் வராது. ஈக்களால் நோய்கள் பரவுகின்றன. ஆதலால் அவை நமக்குப் பெரும் பகையாகும்.

---

# 16. பாண்டியன் இலங்கைப் படையெடுப்பு

| | | | |
|---|---|---|---|
| கேடு | சிதறி | தூதன் | பரம்பரை |
| வீரன் | சினம் | குழப்பம் | வாணிபம் |
| அநீதி | தூற்றி | வழுவாது | இணையற்ற |
| பதவி | ஒற்றர் | அரியணை | ஒழித்துவிட |

வரகுண பாண்டியனுக்குப் பிறகு அவன் மகன் வல்லபமாறன் என்பவன் பாண்டியநாட்டரசனுயினன். இவன் இணையற்ற வீரன்; சிறந்த குணங்களையுடையவன்; தன் நாட்டில் நீதிவழுவாது அரசாட்சி செய்து வந்தான்.

இவன் இவ்வாறு செங்கோல் செலுத்திவரும் நாளில், இலங்கையில் தனபாலன் என்னுமோர் அரசன் ஆட்சி செய்து வந்தான். அவன் பரம்பரை வழக்கப்படி, தன் சகோதரன் மகனுன மகேந்திரனுக்கு மந்திரிப் பதவியைக் கொடாது, வேருெருவனை மந்திரியாக்கிக்கொண்டான். இதனுல் மகேந்திரனும், அவன் சகோதரனும் தனபாலனை வெறுத்துக் குழப்பம் செய்யலாயினர். அதனுல் நாட்டில் பலர் அவர்களுடன் சேர்ந்துகொண்டனர். அவர்கள் தனபாலன் அநீதியாக ஆட்சி செய்வதை நாடெங்கும் தூற்றி, அவன் மேல் வெறுப்பு மூட்டிக் கிளர்ச்சி செய்தனர்.

இதனை ஒற்றர் மூலம் அறிந்த தனபாலன், அவர்களை உயிரோடு விட்டால் தன் ஆட்சிக்கே கேடு விளையும் எனக் கருதி, அவர்களை ஒழித்துவிட முயன்றுன். உடனே அவன் ஒரு சேனையை அனுப்பிக் கிளர்ச்சியை ஒடுக்கி, அவர்களையும், அவர்களுக்கு உதவி புரிந்தவர்

களையும் சிறைப்படுத்துமாறு கட்டளையிட்டான். சேனை யின் வருகை கண்ட மகேந்திரனும் அவன் சகோதரனும் தந்திரமாகத் தப்பியோடி, வல்லபமாறனை அடைந்து நடந்த செய்திகளைக் கூறினர்.

பாண்டியன் அவர்கள்பால் இரக்கம் கொண்டு, அவர்களுக்கு உதவி செய்வதாக வாக்களித்துச் சமயம் பார்த்திருந்தான். இதற்குள் தனபாலன் இறந்து விடவே, அவன் மகன் அகபோதி என்பவன் அரியணை ஏறினன். பாண்டியன், அகபோதியிடம் ஒரு தூதனை அனுப்பி, மகேந்திரனை மந்திரியாக ஏற்றுக்கொள்ளுமாறு கூறினன். தந்தையால் துரத்தப்பட்டவனை வேறொரு அரசன் கட்டளைக்கிணங்கி ஏற்றுக்கொள்வது தன் பெருமைக்குப் பொருந்தாது எனக்கருதி அவன் மறுத்து விட்டான். உடனே பாண்டியன் சினம் கொண்டு, ஒரு பெரும் படையுடன் தன் மகனை இலங்கைக்கனுப்பி, அகபோதியைத்தண்டித்து மகேந்திரனுக்கு முடிசூட்டி வருமாறு கட்டளையிட்டான். பாண்டியன் படை, கடல் கடந்து இலங்கையை அடைந்து போரிட்டது. ஆனால் அகபோதி இப் போரில் வெற்றி பெற்றான். பாண்டியன் படைத் தலைவனும்,மகேந்திரனும் போரில் மாண்டனர். பாண்டியன் சேனை தோல்வியுற்றுத் திரும்பியது.

இதனைக் கேள்வியுற்ற பாண்டியன் கடுஞ்சினங் கொண்டான்; பெரும் படையோடு தானே நேரிற் சென்றான். அகபோதி, பாண்டியன் படையுடன் வருவதை யுணர்ந்து, பெரும் படை திரட்டித் தன் மகனை சேனைத் தலைவனாக்கிப் போருக்கனுப்பினன். இரு படைகளும் கைகலந்தன; கடும் போர் நடந்தது. பாண்டியன் முன்னின்று போரை நடத்தினன்.

இலங்கைப் படைகள் சிதறி யோடின. பாண்டியன் வெற்றிமாலை சூடினன். அகபோதியும், அவன் மகனும் மலேயாத்தீவிற்கு ஓடியொளிந்தனர். பாண்டியன், மகேந்திரன் தம்பிக்குப் பட்டம் சூட்டினன். அவன் பாண்டியனுக்கு உட்பட்ட சிற்றரசனுக அரசாண்டு வந்தான். இவ்வெற்றியால் இலங்கையில் பல தமிழர் குடியேறி வாணிபம் செய்யத் தொடங்கினர். இவ்வாறு இலங்கையை வென்று, தமிழ் மக்களைக் குடியேற்றுவித்துப் பாண்டியன் மீண்டும் தன் நாடு வந்து சேர்ந்தான்.

## வினுக்கள்

1. தனபாலன் செய்த மாற்றம் என்ன?
2. வல்லபமாறன் இலங்கையின் மேல் படையெடுக்கக் காரணமென்ன?
3. அகபோதி, பாண்டியன் வேண்டுகோளை மறுத்ததேன்?
4. பாண்டியன், அகபோதியுடன் போர்புரிந்ததேன்? அதன் முடிவு யாது?

## பயிற்சி

வாக்கியத்தில் எழுவாய்க்குப் பொருத்தமான பயனிலை அமையவேண்டும். 'அவன் பாடினன்.' 'அவள் படித்தாள்.' என ஆண்பால் எழுவாய்க்கு ஆண்பால் பயனிலையும், பெண்பால் எழுவாய்க்குப் பெண்பால் பயனிலையும் தருவதே பொருத்தமாகும். இப்படி யில்லாமல் 'அவன் பாடினள்' என்றே 'அவள் படித்தான்' என்றே எழுதுவது பிழையாகும். இவ்வாறே ஒருமைக்குப் பன்மையும், பன்மைக்கு ஒருமையும் மாற்றி எழுதுவதும் பிழையேயாம்.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்துக:

யானைகள் வந்தது.
மழை பெய்தன.
என் தங்கை பாடினன்.

# 17. இசையின்பம்

| | | | |
|---|---|---|---|
| நிகர் | தாளம் | கலைஞர் | இனிமை |
| வசம் | இயல்பு | சங்கீதம் | வானொலி |
| இடை | நாழிகை | அயர்ச்சி | தாலாட்டு |

யாராயினும் இனிமையாகப் பாடுவதைக் கேட்டால் உங்களுக்கு மகிழ்ச்சி யுண்டாகிறதல்லவா? நீங்களும் சிலவேளைகளில் மகிழ்வுடன் இருக்கும்பொழுது உங்களை அறியாமலே ஏதாவது நினைவிற்கு வந்த பாட்டைப் பாடத் தொடங்குகிறீர்கள். ஆகவே, இசையென்பது இன்பம் ஊட்டக் கூடிய ஒரு கலையாகும்.

இசையும், பாட்டும், தாளமும் ஒத்து இருந்தால் மிகவும் இன்பம் அளிக்கும். அதனையே இன்னிசை என்றும், சங்கீதம் என்றும் சொல்வார்கள். சங்கீதக் கச்சேரிகளிலும், இசைவிழாக்களிலும் இப்படிப்பட்ட இன்னிசையை இசையில் வல்ல கலைஞர் பாடுவதை நீங்கள் கேட்டிருக்கலாம்.

நீங்கள் வீடுகளில் இசைத் தட்டுக்களை வைத்துப் பாடுவதைக் கேட்டிருப்பீர்கள். இக்காலத்தில் வானொலியில் அடிக்கடி இசை விருந்தளிப்பதைக் கேட்டு மகிழ்ந்திருப்பீர்கள்.

இசையின்பம் யாரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. மாடுகள் பாரமான வண்டிகளைச் சிரமப்பட்டு இழுத்துச் செல்லும் பொழுது வண்டிக்காரன் தெம்மாங்கு முதலிய பாடல்களைப்பாடி உற்சாக மூட்டுவான். அப்பாட்டுக்களைக்கேட்டுக்கொண்டே மாடுகள் வண்டிகளை இழுத்துச் செல்லும். கொடிய பாம்புகள் கூட மகுடி எடுத்து வாசித்தால் படமெடுத்து ஆடும்.

குழந்தைகள் தாய்மார் பாடுகின்ற தாலாட்டுப் பாடல்களைக் கேட்டுக்கொண்டே அழுகையை மறந்து உறங்கி விடுகின்றன. பகல் முழுவதும் வேலை செய்து களைத்துப்போன மனிதர்கள் இசையைக் கேட்டு அயர்ச்சி நீங்கி உற்சாகமடைகின்றார்கள். கடவுளும் இசைக்கு வசப்படுபவர் என்று கருதியே இசையுடன் கடவுளைத் துதிக்கின்றார்கள்.

இசை, இவ்வாறு எல்லோருக்கும் இன்பம் அளிக்கின்றது. இசையால் மரங்களும் அசைவற்று நிற்கும். பூக்களும் வண்டின் இசையால் மலரும் எனக் கூறுவர். இசையால் கல்லும் உருகும். இதை விளக்க ஒரு கதை உண்டு.

நாரதர் வீணை வாசிப்பதில் வல்லவர். அதனால் தமக்கு நிகர் யாரும் இல்லை யெனக் கர்வம் கொண்டார். ஒரு சமயம் அவர் அனுமாரைச் சந்தித்துத் தம் பெருமை தோன்றப் பேசினார். அனுமார் அவரது வீணையை வாங்கிப் பாறை மேல் வைத்து வாசித்தார். அவர் வாசித்த இன்னிசையைக் கேட்ட பறவைகள், விலங்குகள் முதலிய யாவும் அசைவற்று நின்றன. மரங்கள் கூட அசையவில்லை; வாசித்து முடிந்து சில நாழிகையானதும் நாரதர் வீணையை எடுத்துச் செல்ல முயன்றார். வீணை எடுக்க வரவில்லை. அனுமார் வாசித்த பொழுது கற்பாறை வெண்ணெய் போல் உருகிப் பின் இறுகியதால், வீணை பள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டது. நாரதர் வீணையை எடுக்க முடியாமல் இருப்பதைக் கண்ட அனுமார், 'ஏன்? நீர் ஒரு பாட்டை வாசித்துப் பாறையை உருக்கி வீணையை எடுத்துப் போகலாமே!' என்றார். நாரதரால் அப்படிச்

செய்ய முடியவில்லை. அவர் தம் கர்வம் ஒழிந்து அனுமாரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அதன்மேல் மீண்டும் அனுமாரே வாசித்து, வீணையை எடுத்துக் கொடுத்தார். இன்னிசை எவ்வளவு சிறப்பு வாய்ந்தது பார்த்தீர்களா?

## வினாக்கள்

1. இன்னிசை எப்போது பிறக்கும்?
2. இசை, உலகத்திலுள்ள யாவற்றையும் தன் வயமாக்கும் தன்மையுடையது என்பதை விளக்கிக் கூறுக.
3. நாரதருக்கும், அனுமாருக்கும் இடையே நிகழ்ந்த சம்பவத்தை விளக்கிக் கூறுக.

## பயிற்சி

எதிர்ப்பதம் கூறுக:— உண்மை, கனவு, ஒற்றுமை.

நான், நீ, அவன் இம்மூன்றும் பெயர்ச் சொற்கள். 'நான்' என்பது தன்னைக் குறிப்பது. இதற்குத் தன்மை என்று பெயர். 'நீ' என்பது முன் நின்று கேட்பவனைக் குறிப்பது. இதற்கு முன்னிலை என்று பெயர். 'அவன்' என்பது தன்மையும், முன்னிலையுமல்லாத ஒருவனைக் குறிப்பது. இது படர்க்கை எனப்படும். இம் மூன்றும் மூவிடங்கள் எனப்படும். பெயர்ச் சொற்கள் மூவிடங்களில் ஒன்றைச் சார்ந்து வரும்.

நான்—தன்மையொருமை

நாம், நாங்கள்—தன்மைப் பன்மை

நீ—முன்னிலையொருமை

நீர், நீங்கள்—முன்னிலைப் பன்மை

அவன், அவள், அவர், அது—படர்க்கை ஒருமை

அவை, அவைகள், அவர்கள்—படர்க்கைப் பன்மை

எழுவாயாக வரும் பெயர்ச் சொல்லுக்குத் தக்கபடி பயனிலையாக வரும் வினைச்சொல்லும் அமைந்திருக்கும்.

---

# 18. சீனச் சிறுமியர்

| | | | |
|---|---|---|---|
| முரடு | முயற்சி | துன்பம் | தொடுத்து |
| பரந்த | தையல் | இறுக்கம் | பாதரக்ஷை |
| தேசம் | செல்வர் | பல்லக்கு | ஈடுபடுத்தல் |

சீன தேசமானது, நமது நாட்டுக்குக் கிழக்கேயிருக்கிறது. அது மிகப் பரந்த தேசம். அத் தேசத்து மக்களுக்குச் சீனர் என்று பெயர்.

இவர்களில் பெரும்பாலர் சமவெளிகளிலே வசிக்கின்றார்கள். எல்லோரும் வசிப்பதற்குப் போதிய வசதி



இல்லை. ஆதலால், பலர் ஆறுகளில் படகு வீடுகள் கட்டிக்கொண்டு அங்கேயே வசிக்கிறார்கள்.

ஆதிகாலத்திலிருந்தே இவர்கள் நாகரிகத்தில் சிறந்தவர்கள். நெடுங்காலமாகச் சீனர்கள் பிறரைத்

தம் நாட்டிற்குள் விடுவதில்லை. ஆதலால், இவர்களது பழக்கவழக்கங்கள் எல்லாம் விநோதமாகவே இருக்கும். பிற்காலத்தில் இங்குப் பலரும் வரத் தலைப்பட்டதால், சீனர்கள் அறிவிலும், கல்வி கேள்விகளிலும் முன்னேறி வருகின்றனர்.

பொதுவாகச் சீனர்கள் உழைப்பாளிகள். இவர்களது வீடுகள் சாதாரணமாக மூங்கில்களால் ஆனவை. ஆடவரும்,பெண்டிரும் தங்கள் தலைமயிரைப் பின்னி நீளமாகத் தொங்கவிட்டுக் கொள்கின்றனர். இவர்கள் மிகுதியும் மரியாதையுடையவர்கள்; விருந்தினரை யாதரிப்பதில் பெரு விருப்புடையவர்கள்.

சீனச் சிறுமிகள், தம் பெற்றோராலும், மற்றவராலும் குறைவாக எண்ணப்பட்டனர். சீனரில் சிலர் தம் பெண்களுக்குப் பேரிடவும் விரும்பாது 'முதற் குட்டி' 'இரண்டாங் குட்டி' என்பர்.

செல்வர் வீட்டுச் சிறுமிகள் ஐந்தாறு ஆண்டுகள் தான் செல்வமாக வளர்க்கப்படுகின்றார்கள். அதன் பின் அவர்களது பாதங்களை முரட்டுத் துணிகளைக் கொண்டு மிகவும் இறுக்கமாகக் கட்டி விடுகின்றார்கள். இவ்வாறு இரண்டாண்டுகள் வரை கால்கள் கட்டப்படும். இவ்வாறு செய்யப்படுவதால் அவர்களது பாதங்கள் மூன்று நான்கு அங்குலங்களுக்கு மேல் இரா. பாதங்கள் இவ்வாறு வளராதிருக்கும் பொருட்டு மரத்தாலும், இரும்பாலும் பாதரக்ஷைகள் செய்து கால்களில் தொடுத்து வைப்பதும் உண்டு. ஆனால் இத்தீய பழக்கம் இப்பொழுது சிறிது சிறிதாக ஒழிந்து வருகிறது. இச்சிறுமிகள் தமது குறுகிய கால்களால் மிகவும் வருந்தித்தான் நடக்க இயலும். இதனால்

இவர்கள் வெளிச் செல்வதில்லை. செல்ல நேர்ந்தால் ஒரு வகைப் பல்லக்கில் செல்வார்கள்; எளிய பெண்களது பாதங்களைப் பார்த்து ஏங்குவார்கள். ஏழைப் பெண்களோ இவ்வகையான துன்பங்களுக்கெல்லாம் ஆளாவதில்லை.

செல்வச் சிறுமிகள் தமது காலத்தை ஒன்றுஞ் செய்யாது வறிதே கழிப்பார்கள். இது மேன்மையாகவே எண்ணப்படுகிறது. சிலருக்குத் தையல் வேலை மாத்திரம் சிறிதளவு தெரிந்திருக்கும். அவர்கள் தமது தலைமயிரை வாரி வகை வகையாக முடித்துக்கொள்வர். இம் முயற்சியிலே அவர்கள் முக்கியமாக ஈடுபட்டிருப்பார்கள்.

### வினாக்கள்

1. சீன நாட்டின் சிறுமிகளின் நிலை என்ன?
2. செல்வர் வீட்டுச் சிறுமியர்க்கு நேரிடும் துயர் என்ன?
3. சீனச் சிறுமியர் அறிந்த வேலைகள் என்ன?
4. அந்நாட்டு ஏழைச் சிறுமியர்களின் நிலை எவ்வாறுளது?

### பயிற்சி

பொருள் கூறுக:

தொடுத்து, பரந்த, விநோதம், வறிதே.

சொந்த வாக்கியங்களில் பின்வரும் சொற்களை அமைத்தெழுதுக:

ஓடியாடி, மேன்மையாக, வகைவகையாக.

எதிர்ப்பதம் கூறுக: அண்மை, விருப்பு.

---

# 19. நாட்டு வணக்கம்

| | | | |
|---|---|---|---|
| மழலை | குலாவி | வந்தனை | போந்தது |
| அமுது | எந்தை | ஆர்ந்தது | வந்தேமாதரம் |

எந்தையும் தாயு மகிழ்ந்து குலாவி
யிருந்தது மிந்நாடே—அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே—அவர்
சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே—இதை
வந்தனை கூறி மனதி லிருத்தியென்
வாயுற வாழ்த்தேனோ—இதை
'வந்தே மாதரம், வந்தே மாதரம்'
என்று வணங்கேனோ! 1

இன்னுயிர் தந்தெமை யீன்று வளர்த்தரு
ளீந்தது மிந்நாடே—எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
அறிந்தது மிந்நாடே—அவர்
கன்னியராகி நிலவினி லாடிக்
களித்தது மிந்நாடே—தங்கள்
பொன்னுட லின்புற நீர்விளை யாடிஇல்
போந்தது மிந்நாடே—இதை
'வந்தே மாதரம், வந்தே மாதரம்'
என்று வணங்கேனோ! 2

— சி. சு. பாரதியார்.

### வினாக்கள்

1. நம் நாட்டின் பழம் பெருமையை விளக்கிக் கூறுக.
2. நம் முந்தையர் இந்நாட்டினில் எவ்வாறு வாழ்ந்திருந்தனர்?

சொற்பொருள்:— எந்தை - என் தந்தை, வந்தனை - வணக்கம்.

---

# 20. தேசிய சேமிப்புத் திட்டம்

| | | | |
|---|---|---|---|
| போல | பஞ்சம் | சிக்கனம் | நாளடைவில் |
| மதிப்பு | சேமிப்பு | நோக்கம் | நீர்ப்பாசனம் |
| கட்டம் | இயன்ற | பத்திரங்கள் | முன்னேற்றம் |
| திட்டம் | அட்டை | கற்பிக்கிறது | தபால்பில்லை |

சிறுவர்களே! நீங்கள் 'தேசிய சேமிப்புத் திட்டம்' என்பதைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இது நாட்டின் நன்மைக்காக மட்டுமன்றி, நம்முடைய நன்மைக்காகவும் அமைக்கப்பட்ட சிறந்த திட்டமாகும். இதனைச் சிறு சேமிப்புத் திட்டம் என்றும் சொல்வதுண்டு. இத் திட்டம் இந்திய அரசாங்கத்தாரால் நடைபெற்று வருகிறது.

நாட்டு மக்கள் அனைவரும் தங்களால் இயன்ற பணத்தைச் சேமிக்க வேண்டுமென்பதே இத் திட்டத்தின் நோக்கம். அவ்வாறு வசூலாகும் பணமானது நம் இந்திய அரசாங்கத்தார் நாட்டின் முன்னேற்றத்திற்கான பலவகைத் தொழில் திட்டங்களையும், உணவு உற்பத்தியைப் பெருக்கவல்ல பல நீர்ப்பாசனத் திட்டங்களையும் நிறைவேற்ற உதவியாக இருக்கிறது. இதனால் நாட்டில் தொழில் பெருகுகின்றது. உணவுப் பஞ்சம் குறைய வழி ஏற்படுகிறது. ஆகவே, இச்சேமிப்புத்திட்டம் நாட்டின் முன்னேற்றத்திற்கு எவ்வளவு முக்கியமானது என்பதை எண்ணிப் பாருங்கள்!

இனி இத்திட்டம் எப்படி வேலை செய்கிறது என்று பார்ப்போம். நாம் சேமிப்பு நிதியில் கட்டிவரும் சிறு சிறு தொகை ஒன்று சேர்ந்து பெருந் தொகையாகும். பணம் நம் அரசாங்கத்தினிடம் இருப்

பதால் மிகவும் பத்திரமாக இருக்கும். நாம் போடும் பணத்திற்கு நல்ல வட்டியும் கிடைக்கிறது. நாம் வேண்டும் சமயங்களில் அதைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். நமக்குப் பணத்தைச் சேமிக்கும் பழக்கத்தையும், சிக்கனமாக வாழும் வழியையும் இத்திட்டம் கற்பிக்கிறது. ஆகவே, இத்திட்டம் தனிப்பட்ட முறையில் ஒவ்வொருவருக்கும் நன்மை தருவதாகவே அமைந்துள்ளது.

இத் திட்டத்தின்படி, நம்மால் எவ்வளவு சேமிக்க முடியுமோ அவ்வளவு பணத்தைச் சேமித்து, நம் ஊரிலுள்ள தபால் நிலையத்தில் கொடுத்தால் அவர்கள் அப் பணத்தின் மதிப்புக்குரிய தேசீய சேமிப்புப் பத்திரங்களைக் கொடுப்பார்கள். பத்திரங்கள் மூன்று விதமாக உள்ளன. அவை ஐந்து ஆண்டுப் பத்திரங்கள், ஏழாண்டுப் பத்திரங்கள், பன்னிரண்டு ஆண்டுப் பத்திரங்கள் எனப்படும். ஐந்து வருட, ஏழு வருடப் பத்திரங்களை எப்பொழுது வேண்டுமானாலும் பணமாக மாற்றிக் கொள்ளலாம். பன்னிரண்டு வருடப் பத்திரங்களில் ஐந்து ரூபாய் மதிப்புள்ள பத்திரங்களைப் பன்னிரண்டு மாதங்களுக்குப் பிறகு பணமாக்கிக் கொள்ளலாம். பத்து ரூபாய் மதிப்புள்ள பத்திரங்களையும், பத்து ரூபாய்க்கு மேற்பட்ட மதிப்புள்ள பத்திரங்களையும் பதினெட்டு மாதங்களுக்குப் பிறகு பணமாக மாற்றலாம். இந்தப் பத்திரங்கள் 5, 10, 50, 100, 1000, 5000 ரூபாய்கள் மதிப்பில் விற்கப்படுகின்றன. இவைகளை எல்லாத் தபால் நிலையங்களிலும் வாங்கலாம். இவ்வாறு வாங்கிய பத்திரங்களை நம் நாட்டில் எந்த ஊரிலுள்ள தபால் நிலையத்திலும் பணமாக மாற்றலாம்.

இதோ! இந்தப் படத்தைப் பாருங்கள். இது ஒரு ஐந்து வருடப் பத்திரம். இதன் மதிப்பு ஐந்து



POST OFFICE NATIONAL SAVINGS CERTIFICATE

NOT TRANSFERABLE
EXCEPT WITH THE PERMISSION OF THE HEAD POST MASTER

5 FIVE RUPEES NS/ Y/1 513074 FIVE RUPEES 5

This is to certify that M.S. Sivaprakasam IS REGISTERED AT THE Mount Road POST OFFICE AS THE HOLDER OF A POST OFFICE 12 YEAR NATIONAL SAVINGS CERTIFICATE, ISSUED IN ACCORDANCE WITH THE TERMS OF THE NOTIFICATION NUMBER PRINTED ON REVERSE AND SUBJECT TO THE APPLICATION AND DECLARATION OF THE PURCHASER WHICH SHALL BE THE BASIS OF THIS CONTRACT. THE GOVERNMENT OF INDIA UNDERTAKE TO PAY HIM, ON PRESENTATION OF THIS CERTIFICATE AT THE AFORESAID POST OFFICE ON OR AFTER THE 5.11.59. RS. 7/8/- OR AT ANY EARLIER DATE AFTER THE EXPIRY OF EIGHTEEN MONTHS THE SUM NOT EXCEEDING RS. 7/8/- SPECIFIED ON THE REVERSE OF THIS CERTIFICATE AS DUE ON SUCH DATE.

Post office Mount Road
Date of Issue 5-11-47
Register No. 75

POST OFFICE DATE STAMP
S.B.
5 NOV 47

SEE REVERSE

Post master

ரூபாய். இது ஐந்து ரூபாய் நோட்டுப் போல இருக்கிறதல்லவா? சிறுவர்களே! ஐந்து ரூபாய்க்குக் குறைவாக ஒரு சமயத்தில் சேர்க்கக் கூடியவர்களுக்கு இத் திட்டம் பயன்படவில்லையே என்று எண்ணவேண்டாம். நான்கணு, எட்டணு, ஒரு ரூபாய் சேமிப்பவர்களுக்கும் அதற்குரிய தபால் பில்லைகள் கொடுக்கப்படுகின்றன. தபால் நிலையத்தில் இத் தபால் பில்லைகளை ஒட்டுவதற்கென்று ஒரு அட்டையும் கொடுக்கிருர்கள். ஒரு சேமிப்பு அட்டையை வாங்கி, நான்கணு முதலாக எவ்வளவு பணம் கிடைக்கிறதோ அதற்குரிய தபால் பில்லையை வாங்கி அட்டையிலுள்ள கட்டங்களில் ஒட்டிவர வேண்டும். மொத்த மதிப்பு ஐந்து ரூபாய் ஆனவுடன் அந்த அட்டையைத் தபால் நிலையத்தில் கொடுத்து ஒரு ஐந்து ரூபாய்ப் பத்திரத்தை வாங்கிக் கொள்ளலாம்.

இப்படிச் சேர்த்துக்கொண்டே வந்தால் 'பல துளி பெரு வெள்ளம்' என்பது போல நாளடைவில் பெருந் தொகையாகும். சேமித்து வைக்கும் பழக்கமும் ஏற்படும். நமக்குப் பிற்கால வாழ்க்கைக்குப் பயன் படும். ஆகையால், சிறுவர்களே! நீங்கள் இந்தத் தேசிய சேமிப்புத் திட்டத்தின்படி சேமிக்கும் பழக்கத்தைக் கொள்வது மிகவும் சிறந்ததாகும்.

### வினுக்கள்

1. தேசிய சேமிப்புத் திட்டம் யாரால், எதற்காக நடத்தப்படுகிறது?
2. இத் திட்டத்தால் நாடு அடையக் கூடிய நன்மை என்ன?
3. இத் திட்டத்தின்படி பணம் சேமிக்கும் விவரத்தை விளக்கி வரைக.

### பயிற்சி

வந்த பையன் கொடுத்துச் சென்றான். இவ்வாக்கியத்தில் வந்த, கொடுத்து, சென்றான் என்ற மூன்று சொற்களும் வினைச்சொற்களே. சென்றான் என்ற வினைச்சொல் பொருள் முற்றுப்பெற்றிருக்கிறது. இதற்கு முற்றுவினை அல்லது வினைமுற்று என்று பெயர். வந்த, கொடுத்து என்ற வினைகள் முற்றுப் பெறவில்லை. இவை எச்சவினை எனப்படும்.

வந்த என்ற எச்சம் பையன் என்ற பெயரைத் தழுவுகிறது. ஆதலால் இது பெயரெச்சம் எனப்படும். கொடுத்து என்ற எச்சம் சென்றான் என்ற வினையைத் தழுவுகிறது. அதனால் இது வினை எச்சம் எனப்படும். எனவே வினைச்சொல் முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என மூன்றாகப் பிரிக்கப்படும்.

பின்வரும் சொற்களை வைத்து வாக்கியம் அமைக்க:

நிறைவேற்ற, முன்னேற்றத்திற்கான, சிக்கனமாக, சேமித்து, முக்கியமானது.

---

# 21. சிவாஜி மன்னர்

| | | | |
|---|---|---|---|
| பக்தி | ஊக்கம் | அலுவல் | வீரமக்கள் |
| பலம் | தந்திரம் | அறிவாளி | அபிமானம் |
| பதவி | வரலாறு | இதிகாசம் | சமஸ்தானம் |
| சேனை | பகைவர் | சுயேச்சை | உத்தியோகம் |

நமது இந்து தேசத்தில் பல வீரமக்கள் பேரும் புகழும் பெற்று விளங்கினர். அவருள் நமது சிவாஜியும் ஒருவராவர். இவர் தந்தையின் பெயர் ஷாஜி; தாயின் பெயர் ஜீஜீபாய்.

தந்தை ஷாஜி, பீஜப்பூர் சமஸ்தானத்தில் உயர்ந்த உத்தியோகத்தில் இருந்தார். ஒரு சமயம் அரசாங்க அலுவலாய் அவர் தென் தேசம் நோக்கிச் செல்ல நேர்ந்தது. அப்போது அவர் தம் மகனைத் தாதாஜி என்னும் பிராமணர் ஒருவரிடம் ஒப்புவித்துச் சென்றார். தாதாஜி மிக்க அறிவாளி; பெரிதும் அன்புடையவர். சிவாஜிக்குப் போர் நூல், அரசநீதி முதலியவற்றை நன்கு கற்பித்து வந்தார். தாயும் தன் மைந்தனுக்கு நாள்தோறும் இதிகாசங்களில் உள்ள வீரர்களின் வரலாறுகளைச் சொல்லி வந்தாள். தெய்வ பக்தி உண்டாகும்படி அவரைக் கோவிலுக்கு அழைத்துக்கொண்டு போவாள். சிவாஜிக்கு பழங்கால வீரர்களைப் போல், தானும் சுத்த வீரனாக விளங்க வேண்டும் என்ற ஆவலுண்டாயிற்று. அதைக் கண்ட தாயும், தாதாஜியும் அகம் மிக மகிழ்ந்து, மேலும் மேலும் சிவாஜிக்கு ஊக்கம் ஊட்டி வந்தார்கள். சிவாஜி தேசாபிமானமும், தெய்வ பக்தியும் பெற்று வளர்ந்து வந்தார்.

சிறு வயதிலேயே சிவாஜி மிகுந்த பலமுடையவ ராய் விளங்கினர். அவரது அகன்ற மார்பும், நீண்ட கைகளும், உயர்ந்த தோள்களும், மலர்ந்த முகமும் யாவரையும் கவர்ந்தன.



இவ்வாறு அவர் வளர்ந்து வரும்போது அவ ருக்குச் சுதந்திரத்தில் விருப்பம் உண்டாயிற்று. தமது தந்தையைப் போல் பீஜப்பூர் சுல்தானிடத்தில் உத்தி

யோகம் பெறுவதை அவர் விரும்பவில்லை. தமது நாட்டின் மீதும், இந்து மதத்தின் மீதும் அவருக்கு மிகுந்த பற்றுண்டு. டில்லி சுல்தான் மகாராஷ்டிரர்களைக் கீழ்ப்படுத்தி அடக்கி ஆண்டான்; அவர்களைத் துன்புறுத்தியும் வந்தான். சிவாஜி தமது நாட்டார் தாழ்ந்த நிலையில் இருப்பதைக் கண்டார்; அவர்களை உயர்த்த வேண்டுமென்று கருதினார். ஆதலால், அவர் தம்மையொத்த வயதுள்ள இளைஞர்கள் பலரையும் சேர்த்து, ஒரு படையைத் திரட்டினார்.

இந்தச் சேனையின் துணைகொண்டு, அவர் பீஜப்பூரில் உள்ள ஒரு கோட்டையைப் பிடித்தார். பிறகு அவர் தமது சேனையைப் பலப்படுத்தினார்; இராஜகிரி என்னும் இடத்தில் ஒரு கோட்டையைக் கட்டிக் கொண்டு, அதில் வசித்து வந்தார்; சிறிது காலத்தில் பின்னும் பல கோட்டைகளைக் கைப்பற்றினார். மகாராஷ்டிரர்கள் எல்லோருக்கும் அவர் தலைவரானார்.

இவ்விதம் சிவாஜி முன்னேறி வருவதைக் கண்ட பீஜப்பூர் சுல்தான் அஞ்சினான். சிவாஜியைப் பிடித்து வரும்படி அவன் தன் படைத் தலைவனை அனுப்பினான். சிவாஜி அத்தலைவனை ஒரு சூழ்ச்சியால் கொன்று விட்டார். பிறகு சுல்தான் மற்றொரு சேனையை அனுப்பினான். சிவாஜி அச் சேனையையும் பின் வாங்கும்படி செய்தார்.

அக்காலத்தில் டில்லியில் இருந்த மொகலாய சக்கரவர்த்தியாகிய ஒளரங்கசீப், சிவாஜியைச் சூழ்ச்சியாக அழைத்துச் சிறையில் அடைத்தார். சிவாஜி தந்திரமாகச் சிறையினின்றும் வெளியேறி, துறவி வேடம் பூண்டு, இராஜகிரியிலுள்ள கோட்டையை

அடைந்தார். பிறகு அவர் மகாராஷ்டிர மன்னராக முடிசூட்டிக் கொண்டார். ஆயினும், அவர் ஆறு ஆண்டுகளே அரசராய் இருந்தார். தமது ஐம்பத்து மூன்றாவது வயதில் அவர் காலமானார்.

சிவாஜி தமது சொந்த முயற்சியாலேயே மகா ராஷ்டிர அரசாங்கத்தை அமைத்த பெரு வீரர்; தமது நாட்டவர் நிலையை உயர்த்த அரும்பாடுபட்ட ஒரு பெரிய தேசாபிமானி; துறவிகளிடத்தும், பெண்க ளிடத்தும் மிகுந்த மரியாதை காட்டுபவர். அஞ்சா நெஞ்சமும், அருஞ்செயல் புரியும் ஆற்றலும் அவர் பால் இயல்பாக அமைந்திருந்தன. இக் காரணங்க ளால் அவர் புகழ் இன்றும் அழியாது இருக்கின்றது.

## வினாக்கள்

1. சிவாஜியின் தாய் தந்தையரைப் பற்றி வரைக.
2. அவருடைய இளம் பருவம் எவ்வாறு கழிந்தது ?
3. அவர் எத்தகைய தோற்றமுடையவர் ?
4. அவர் பீஜப்பூர் கோட்டையை ஏன், எவ்வாறு பிடித்தார் ?
5. அவர் செய்த பிற வீரச் செயல்கள் யாவை ?

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களிலுள்ள எச்ச வினைகளைக் கூறுக:

1. நடந்து வந்த சிறுவன் வண்டி ஏறிச் சென்றான்.
2. அடக்கி ஆண்ட அரசன் அழிவான்.
3. நண்பனைப் பார்க்கச் சென்றேன்.

பின்வரும் சொற்களில் அறுவகைப் பெயர்களையும் கூறுக:

மார்பு, விருப்பம், நாடு, அரசன், சூழ்ச்சி, நான், வயது, அன்பு.

---

# 22. நல்ல தீர்ப்பு

| | | | |
|---|---|---|---|
| மூடி | தீர்ப்பு | பாதுகாப்பு | துன்புறுத்து |
| ஐயம் | இழந்த | முறையிட்டு | கருப்பஞ்சாறு |
| பொது | தோண்டி | நியாயாதிபதி | உணவுச்சாலை |

ஒரு காலத்தில் ஐந்து பேர்கள் ஒன்றாய்ச் சேர்ந்து கொண்டு, வேலைதேடி வேற்றூர்க்குச் சென்றார்கள். போகும் வழியில் அவர்கள் ஒரு பணமுடிப்பைக் கண்டார்கள். அவர்கள் அதைப் பத்திரமாக எடுத்து, ஒரு தோண்டியில் வைத்து மூடித் தூக்கிக்கொண்டு சென்றார்கள்.

வழியில் உள்ள ஒரு சிற்றூரில் ஒரு கிழவி உண வுச்சாலை வைத்திருந்தாள். ஐவரும் அவளிடத்திற் குச் சென்று, "பாட்டி! இந்தத் தோண்டியில் பொருள் இருக்கிறது. இது எங்கள் ஐவருக்கும் பொது; இதை வைத்திருந்து, நாங்கள் ஐவரும் சேர்ந்து வந்து கேட் கும் போது கொடுக்க வேண்டும்; நாங்கள் இவ்வூரில் சிலநாள் தங்கியிருப்போம்" என்றனர்.

கிழவி, "ஐயா! வீட்டின் புறத்தில் உள்ள தோட்டத்திற்குச் சென்று, நீங்களே பாதுகாப்புள்ள ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து இதை ஒளித்து வைத்து வாருங்கள்; தோட்டத்தின் திறவுகோல் எப்பொழு தும் என்னிடம் தான் இருக்கும்" என்றாள். ஐவரும் சென்று தோட்டத்தில் தோண்டியைப் புதைத்து வைத்துவிட்டு, அவளிடத்திலேயே உணவுண்டு வந் தார்கள்.

பிறகு ஒருநாள் ஐவரும் எதிர் வீட்டுத் திண்ணை யில் அமர்ந்திருந்தனர். அப்போது நான்கு பேர்கள்

மற்ருெரு நண்பனைப் பார்த்து, "நீ கிழவி வீட்டுக்குச் சென்று, கருப்பஞ்சாறு வாங்குவதற்குத் தோண்டி எடுத்து வா" என்று சொல்லி அனுப்பினுர்கள். அவன் மற்ற நால்வரையும் மோசம் செய்து, கிழவியிடம் வைத்திருந்த பொருளை எப்படியாவது கவர்ந்து



சென்றுவிட வேண்டுமென்று எண்ணிக்கொண்டிருந்தான். அவனை மற்றவர்கள் இவ்வாறு ஏவவும், அவன் இதுவே தக்க சமயம் எனக் கருதி கிழவியினிடம் சென்று, "தோண்டி எடுத்துவரச் சொன்ஞர்கள்" என்ருன். புதைத்து வைத்திருந்த தோண்டியைத்தான் அவர்கள் தோண்டியெடுத்துவரச் சொன்னதாகக் கிழவி எண்ணி, தெருவில் வந்து மற்ற நால்வரையும் நோக்கி, "அவனைத் தோண்டியெடுத்துவரச் சொன்னீர்களா?" என்று கேட்டாள். அவர்கள் "ஆம், ஆம், எடுத்துவரச் சொன்னேம்" என்ருர்கள்.

கிழவி வீட்டினுள்ளே சென்று, சாவியை எடுத்து வந்து, அவன் கையிற் கொடுத்து, "நீ தானே தோண்டி யெடுத்துக்கொண்டு போ" என்று சொன்னாள். அவன் தனக்கு நற்காலந்தான் என்று மகிழ்ச்சியுற்றுத் தோண்டியைத் தோண்டி எடுத்துக்கொண்டு, தோட்டத்தின் வழியாகவே பின்புறமாக ஓடிப்போய் விட்டான். சிறிது நேரம் வரையில் அவன் தோண்டி கொண்டு வராததனால், மற்ற நால்வரும் அவன்மீது ஐயங்கொண்டு, கிழவியினிடம் நடந்ததைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அவளைத் துன்புறுத்தலானார்கள். கிழவி என்ன செய்வாள்! அவர்கள் வைத்திருந்த பொருளைக்கொடுக்க முடியாமல் தத்தளித்தாள். "நீங்கள் சொன்னதினால்தானே நான் சாவியைக் கொடுத்தேன்" என்று கூறினாள். அவள் சொல்வதை அவர்கள் கேட்காமல் அவ்வூர் நியாய சபையில் சென்று முறையிட்டனர்; இழந்த பொருளை அவளே தங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று நியாயாதிபதியிடத்தில் முறையிட்டுக் கொண்டனர்.

நியாயாதிபதி கிழவியைத் தருவித்து, நடந்ததை அறிந்து, கிழவியின் குற்றமற்ற தன்மையைத் தெரிந்து கொண்டார். பிறகு பிடிவாதமாகக் கிழவியைத் துன்புறுத்திய நால்வரையும்நோக்கி, "உங்கள் வழக்கின்படி ஐவரும் வந்து கேட்டாலன்றி, தோண்டியைக் கொடுக்க முடியாது. ஆதலால், அந்த ஐந்தாவது மனிதனைக் கண்டுபிடித்து அழைத்துக்கொண்டு வாருங்கள். அப்போது கிழவி உங்கள் தோண்டியைக் கொடுப்பாள்" என்று வழக்குத் தீர்த்தார். நால்வரும் மறுக்க இயலாது வருத்தத்துடனே திரும்பிப் போயினர்.

## வினாக்கள்

1. ஐந்தாமவன் பொருளை எவ்வாறு அபகரித்துச் சென்றான் ?
2. நியாயாதிபதி கூறிய தீர்ப்பென்ன ?
3. இக்கதையை உன் சொந்த வாக்கியங்களில் சுருக்கி வரைக.

## பயிற்சி

1. எதிரான சொற்களை வரைக:

சில நாள், நியாயம்.

2. இரு பொருள்களிலும் வாக்கியம் அமைக்க:

தோண்டி, ஆண்டு.

3. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:

(1) ஒரு——ஒரு கிழவி——வைத்திருந்தாள்.

(2) ஒருநாள்——எதிர் வீட்டுத்——இருந்தார்கள்.

மலர் போன்ற கை, கண்ணனைக் கண்டான். போன்ற என்பது உவமையைக் காட்டவரும் சொல். ஐ என்பது செயப்படுபொருளைத்தரும் உருபு, இவ்விரண்டும் இடைச் சொற்களாம்.

சாலப் பேசினான், களி கூர் நெஞ்சம்-சால, கூர் என்ற சொற்கள் மிகுதிப் பொருளைத் தருகின்றன. சால என்பது பேசினான் என்ற வினையில் மிகுதித் தன்மையைக் காட்டுகின்றது. கூர் என்பது நெஞ்சம் என்னும் பெயரை அடுத்து, அதன் தன்மையைக் காட்டுகின்றது. இவ்வாறு வரும் சொற்கள் உரிச் சொற்கள் எனப்படும்.

தமிழ் மொழியிலுள்ள சொற்கள் பெயர், வினை, இடை, உரி என நான்கு வகைப்படும்.

---

# 23. உணவு

| | | | |
|---|---|---|---|
| நலம் | ஏற்றது | அமுதம் | அவசியம் |
| மிதம் | தக்கது | உண்பது | அசுத்தம் |
| நஞ்சு | மிதமாக | முக்கியம் | பழுக்காத |
| அழுகி | அடிக்கடி | மிஞ்சுதல் | சீரணித்தல் |

நாம் உயிர் வாழ்வதற்கு அவசியம் வேண்டியது காற்று. அதற்கு அடுத்த முக்கியமான பொருள் தண்ணீர். தண்ணீருக்கு அடுத்தபடியாயுள்ளது உணவு. உலகத்தில் உள்ள எல்லாப் பிராணிகளுக்கும் உணவு முக்கியமான பொருளாக இருக்கிறது.

நாம் உண்ணும் உணவு நமது உடல் நலத்திற்கு ஏற்றதாக இருக்கவேண்டும். அழுகிப்போன உணவுப் பொருள்களையும், நன்ருக வேகாத பண்டங்களையும், பழுக்காத பழங்களையும் உண்ணலாகாது. ஆறிப்போன பொருள்களைச் சாப்பிடுவதும் நன்றன்று. நாம் உண்ணும் பொருள்களில் ஈ முதலியன உட்கார்ந்து அசுத்தம் செய்யாமலும், எறும்பு, பாச்சை, பல்லி, பூரான் முதலியன விழாமலும் இருக்க வேண்டும்.

'கூழாளுலும் குளித்துக் குடி' என்பது எல்லோரும் நன்கறிந்த பழமொழி. எனவே சுத்தமாகக் குளித்த பிறகு உண்ணுவது உடம்புக்கு மிகவும் நல்லது. நன்ருகப்பசித்த பின்னரே நாம் உண்ண வேண்டும். வேளை தவறி உண்ணலாகாது. வேளை தவறி உண்பதும், அடிக்கடி உண்பதும் அசீரணத்தை யுண்டுபண்ணும். அதனுல் நோயுண்டாகும்.

சிலர், ஒரு நாளைக்கு மூன்று வேளை சாப்பிடுவார்கள்; அது தவறு. ஒரு நாளைக்கு இரண்டு வேளையே

உண்ணவேண்டும். 'உண்பதிரு பொழுதொழிய மூன்று பொழுதுண்ணேம்' என்பர் பெரியோர். இதுவே நமது மருத்துவ நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் விதியாகும். உண்பதிலும் மிதமாகவே உண்ணவேண்டும். 'அளவுக்கு மிஞ்சினுல் அமுதமும் நஞ்சு' 'மீதூண் விரும்பேல்' என்பன நம் நாட்டுப் பெரியோர்கள் கூறிய பொன் மொழிகளன்ருே?

உணவினை வயதுக்கேற்றவாறும், செய்யும் வேலைக்குத் தக்கபடியும், உணவின் தன்மைக்குத் தக்கவாறும், காலநிலைக்கேற்றபடியும் உட்கொள்ள வேண்டும். ஒரு குழந்தை உண்ணும் உணவின் அளவு, வயது வந்த மனிதனுக்குப் பற்ருது. வயது வந்தவன் உண்ணும் அளவு, ஒரு கிழவன் உண்ண முடியாது. நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடுபவன் உட்கொள்ளும் உணவின் அளவு, மனமுயற்சியுடையவர்களுக்குத் தேவையிராது. பல சுவையுடன் கூடிய உணவின் அளவு, இனிப்பான பண்டங்களைத் தின்ன முடியாது. வேனிற்காலத்திய உணவின் அளவு, மழைக் காலத்தில் உட்கொள்வதைக் காட்டிலும் சற்று அதிகமாயிருக்கும். ஆகவே, உணவின் அளவினையும், சுவையினையும் அறிந்து உண்ணவேண்டும். உணவின் அளவு அதிகப்பட்டாலும் துன்பம். அளவு குறைந்தாலும் பசி தீராது.

உணவு உட்கொள்ளும்போது சிறிது குறைத்தே உண்ண வேண்டும். இரவில் அதிகமான உணவுகளை உண்ணலாகாது. நமது திருவள்ளுவ நாயனர் "உண்ட உணவு சீரணித்துப் போய்விட்ட பிறகு, உணவை அளவாகக் காலம் அறிந்து உண்ணின்

நெடுங்காலம் உயிருடன் வாழலாம்'' என்ற பொருள்பட

" அற்றல் அளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு."

என்று கூறியிருக்கிறார். இப் பொன்மொழியைக் கடைப்பிடித்து நடந்து நீங்கள் நெடுங்காலம் வாழ்வீர்களாக.

## வினக்கள்

1. உணவு எவ்வாறு இன்றியமையாததாகும் ?
2. நாம் எத்தகைய உணவை உண்ணவேண்டும் ?
3. நாம் எத்தகைய உணவுப் பழக்கங்களைக் கைக்கொள்ள வேண்டும்.
4. நெடுங்காலம் வாழ்தற்குரிய வழி என்ன ?

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களில் நான்குவகைச் சொற்களையும் எடுத்துக் காட்டுக:

(1) தோட்டியைப்போல் உழைத்துத் துரைபோல் சாப்பிட வேண்டும்.

(2) காளை போன்ற வீரனைக் கண்டேன்.

இப் பாடத்திலிருந்து எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் மூன்றும் கொண்ட வாக்கியங்கள் மூன்று எழுதுக:

வாக்கியமாக அமைக்க:

மூன்று, சிலர், வேளை, நாளைக்குச் சாப்பிடுவார்கள்.

கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:

(1) நாம் உண்ணும் —— உடல் நலத்திற்கு —— இருக்க வேண்டும்.

(2) நாம் உயிர் —— அவசியம் —— காற்று.

## 24. கிராமப் பஞ்சாயத்து

| | | | |
|---|---|---|---|
| சபை | சுத்தம் | சம்பந்தம் | நியமித்தல் |
| துறை | காரியம் | செய்தல் | பொதுநலம் |
| கழகம் | ஊதியம் | அனுபவம் | வசூலித்தல் |

### உரையாடல்

உபாத்தியாயர்:— பிள்ளைகளே! ஒவ்வொருவரும் உடல் நலத்தின் பொருட்டுக் கைக்கொள்ள வேண்டிய முறைகள் பலவுண்டு. அவற்றுள் நீங்கள் உடம்பையும், வீட்டையும் சுத்தமாய் வைத்துக்கொள்வது பற்றி நேற்றுத் தெரிந்துகொண்டீர்கள். இன்னும் எவைகளைச் சுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டும் தெரியுமா?

பையன்:— நாம் நடமாடும் தெருக்களும், பொது இடங்களும் கூடச் சுத்தமாய் இருக்க வேண்டும். ஆனால், அவற்றைச் சுத்தமாக வைத்திருக்க நாம் என்ன செய்ய வேண்டும்?

உபா:— அதன் பொருட்டுப் பல துறையிலும் வேலை செய்பவர்கள் பலரை நியமிக்க வேண்டும். அவர்கள் வேலை செய்வதைப் பார்வையிடப் பார்வையாளர்கள் பலர் நியமிக்கப்பட வேண்டும்.

பை:— இவர்களை நாம் நியமிப்பதெப்படி?

உபா:— இவர்களை நாம் நியமிப்பதற்குப் பதிலாக, நம்மால் அமைக்கப்படும் ஒரு கழகம் இவர்களை நிய

மிக்கும். இச்சபையே கிராமப் பஞ்சாயத்து எனப்படும். இச்சபை கிராமத்திலுள்ள மக்களின் எண்ணிக்கைக்



குத் தக்கபடி ஐவர்களேயோ அதற்கதிகமாகவோ அங்கத்தினர்களைக் கொண்டதாயிருக்கும்.

பை:—இந்தப் பஞ்சாயத்துச் சபையின் வேலைகள் என்ன ?

உபா:—கிராம சம்பந்தமான பொதுக் காரியங்களை எல்லாம் கவனிப்பது இச்சபையின் வேலையாகும். தெருக்களைச் சுத்தம் செய்தல், இரவில் விளக்கேற்றல், சாலைகளைப் பழுது பார்த்தல் முதலியன இச்சபையினர் கவனிக்கவேண்டிய வேலைகள். சில கிராமங்களில் பள்ளிக்கூடங்கள் நடத்தப்படும். வைத்திய சாலைகளும் அமைக்கப்பட்டிருக்கும். மேலும் இவர்கள் ஏரி, குளம், முதலியவற்றின் நீர் அசுத்தமாகாதிருக்கும்படி காவலாளிகளை நியமித்துப் பாதுகாப்பார்கள்.

பை:— இப்பஞ்சாயத்தார்களைத் தேர்ந்தெடுப்பது எப்படி?

உபா:—கிராமத்திலுள்ளவர்கள் யாவரும் ஒரு கூட்டமாகக் கூடுவார்கள். அறிவும், அனுபவமும், உள்ளவர்களையும், பொது நலப் பணியில் நாட்டம் உடையவர்களையும் தேர்ந்தெடுப்பார்கள். பஞ்சாயத்தார்கள் தங்களுக்குள்ளே ஒருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். அவருக்குத் தலைவர் என்று பெயர்.

பை:—கிராமத்தில் பொது நலத்தின் பொருட்டுச் செலவு செய்ய இவர்களுக்குப் பணம் ஏது?

உபா:—இவர்கள் ஊரிலுள்ள மக்களிடமிருந்து வரி வசூலிப்பார்கள். வீட்டு வரி, பந்தல் வரி, பேட்டை வரி, சந்தையில் விற்கும் பண்டங்களுக்கு வரி, தொழில் வரி முதலிய பல வரிகள் வசூலிக்கப்படும். அப்பணத்தைக் கொண்டு கிராமப் பொதுச் செலவு செய்யப்படும்.

பை:—இவர்களுக்கெல்லாம் ஊதியம் கொடுப்பது உண்டா?

உபா:—இப் பஞ்சாயத்தார்களுக்கு ஊதியமில்லை. இவர்கள் யாவரும் கிராமப் பொது நன்மைக்காக வேலை செய்பவர்கள்.

பை:—ஒவ்வோர் ஊரிலும் இம்மாதிரியான சபைகள் இருக்குமல்லவா?

உபா:—பெரும்பாலும் இருக்கும். சிறிய கிராமங்களாக இருந்தால் இரண்டு மூன்று கிராமங்களுக்குச் சேர்ந்து ஒரு பஞ்சாயத்துச் சபை ஏற்பட்டிருக்கும்.

பெரிய நகரங்களில் உள்ள இவ்வாறுன சபைகளுக்கு நகர பரிபாலன சபைகள் என்று பெயர்.

பஞ்சாயத்துக்கள் பொது நன்மைக்குப் பாடுபட வேண்டிய நிலையங்களாகும். பஞ்சாயத்தார்கள் தந் நலம் கருதலாகாது. தக்கார்களையே பஞ்சாயத்தார்களாகத் தேர்ந்தெடுப்பது நமது கடமை.

## வினுக்கள்

1. கிராமப் பஞ்சாயத்துக் கழகம் செய்யும் வேலைகள் என்ன?
2. பஞ்சாயத்தார்களைத் தேர்ந்தெடுப்பது எவ்வாறு?
3. கிராமப் பொதுநலத்தின்பொருட்டுச் செலவிட எவ்வாறு பணம் கிடைக்கிறது?
4. பஞ்சாயத்தார் எவ்வாறு வேலை செய்கின்றனர்?

## பயிற்சி

1. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:

(1) பல துறையிலும் வேலை —— பலரை —— வேண்டும்.
(2) கிராம சம்பந்தமான —— காரியங்களை யெல்லாம் —— இவர்கள் வேலையாகும்.

2. பின்வருவனவற்றுள் பெயர்ச்சொல், வினைச்சொற்களை எடுத்துக் காட்டுக:

(1) நான் மதுரை சென்று புத்தகம் வாங்கினேன்.
(2) பிறர்க்கு நன்மை செய்வாய்.
(3) நகரசபை பொதுநலமான காரியங்களைச் செய்கின்றது.

# 25. அப்பம் திருடிய எலி (பாட்டு)

| | | | |
|---|---|---|---|
| விதி | கூரிய | அணுக | நேர்த்தி |
| வட்டில் | வாசம் | அப்பம் | பண்டிதர் |
| ஒப்ப | சத்தம் | பருத்து | அடுக்களை |
| சனம் | தம்பி | விளம்பு | பணிகாரம் |



செட்டியார் வீட்டில் அடுக்களையில்—சென்ற
தீபா வலியன்றிரவு தனில்
வட்டிலில் அப்பம் இருந்ததம்மா—அதை
வாசத்தி னுல்அறிந் தோரெலிதான், (1)

'நெய்யினில் சுட்ட பணிகாரம்—இது
நேர்த்தியாய்ச் சுட்ட பணிகாரம்
பையப் பையக்கடித் துண்பதற்கும்—வெகு
பக்குவ மான பணிகாரம்.' (என்று நினைத்தது. (2)
அப்போது வேறு சில எலிகள் சத்தமிடக் கேட்டு)

'என்ன சத்தம்ஓ ஓ தம்பிமார்கள்—கூடி
இங்கு விளையாட வந்தனரோ,
அன்னவர் ஓடி வருமுன்னமே—யானும்
அப்பத்தைக் கொண்டு மறைந்திடுவேன்.' (3)

(என்று எண்ணி)

ஆரும் அறியாத மூலையிலே—அந்த
அப்பத்தை அவ்வெலி கொண்டுவைத்துக்
கூரிய பல்லால் கறம்பிஒருபொடி
கூடச் சிதருமல் தின்றதம்மா. (4)

மட்டுக்கு மிஞ்சிப் புசித்ததனுல்—மூச்சு
வாங்க வருந்தி வயிறூதிக்
கட்டப் படுவதைச் சுற்றத்தார்எல்லோரும்
கண்டொரு பண்டிதர்க் காளும்விட்டார். (5)

பண்டிதர் வந்துகை பார்த்தனர் அவ்வெலி
பண்டம் முழுதையும் உண்டகதை
விண்டதும் கேட்டுக் குறிகளும்நோக்கி
விதிப்படி ஆய்ந்து விளம்பினரே: (6)

"அப்பம் முழுதும் நீ தின்றனையே—அதை
அன்பிற் குரியஉன் தம்பியர்க்கும்
ஒப்பவே பங்கிட் டளித்திருந்தால்—துன்பம்
ஒன்றும் வந்துன்னை அணுகாதே." (7)

ஆனத ஞலே கிடைத்தபொருளை—நாம்
ஆகும்மட் டும்பகுத் துண்ண வேண்டும்.
ஈனமாந் தன்னயத் தால்வருந் துன்பமே
இன்பம் அளிக்கும் பொதுநயமே. (8)

— கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை.

## விஞக்கள்

1. பணிகாரம் எப்படிப்பட்டது?
2. எலிக்கு ஏன் துன்பம் நேரிட்டது?
3. பண்டிதர் என்ன கூறினர்?

சொற்பொருள்:— ஆய்ந்து - ஆராய்ந்து, நேர்த்தி - அழகு, அணுக - நெருங்க, ஈனம் - இழிவு.

# 26. கடிதங்கள் எழுதும் முறை

## 1. மாணவன் ஆசிரியருக்கு எழுதிய விடுமுறைக் கடிதம்

நா. கனகசபை

நாயக்கர் புதுத்தெரு, மதுரை.
13, ஏப்ரல், 1948.

ஆசிரியர் அவர்களுக்கு,

கனம் பொருந்திய ஐயா,

நான் நேற்று மாலை பாடசாலையிலிருந்து வீட்டுக்கு வந்தேன். என் மாமாவுக்குத் திருமணமென்று சென்னையிலிருந்து தந்தி வந்திருப்பதாக என் தகப்பனார் சொன்னார். நாங்கள் எல்லோரும் அவசியம் போகவேண்டியிருப்பதால், நாளையிலிருந்து எனக்கு ஒரு வாரத்துக்கு விடுமுறை கொடுக்கும்படியாய்த் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

பெற்றோர் கையொப்பம், தங்கள் கீழ்ப்படிதலுள்ள மாணாக்கன்,

நாகரத்தினம் பிள்ளை. நா. கனகசபை.

விலாசம்:

ஸ்ரீ சபாபதி முதலியாரவர்கள்,
ஆசிரியர், நான்காம் வகுப்பு,
செயின்ட்மேரி பாடசாலை,
மதுரை.

## 2. பஸ் பிரயாணம் பற்றிய கடிதம்

பா. நடேசன் தெற்குமாசி வீதி, மதுரை.
ஸ்ரீ பார்த்தசாரதிக்கு 10, அக்டோபர், 1948.

என் அன்புமிக்க நண்ப,

உன்னை விட்டுப் பிரிந்த பின், அங்கிருந்து மோட்டாரில் வரும்பொழுது நான் கண்ட காட்சிகளையும், அடைந்த இன்பத்தையும் உனக்கு அறிவிக்க விரும்புகிறேன். அது உனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். என்னுடன் எனது மாமனாரும் வந்தார். மாலை 2-மணிக்குப் புறப்பட்டு மோட்டார் நிலையத்திற்குப் போனோம். அங்கிருந்து 2 மணிக்குப் புறப்படும் மோட்டார், மதுரைக்கு மாலை 6-30 மணிக்குப் போய்ச் சேரும் என்று சொன்னார்கள். நிலையத்தில் கூட்டம் அதிகம்.

வண்டி 2-15 மணிக்குப் புறப்பட்டது. நாங்கள் மோட்டாரோட்டியின் பக்கத்தில் முதல் இடத்தில் உட்கார்ந்து கொண்டோம். எங்களோடு வண்டியில் 23-பேர் இருந்தனர். துணையாளர் (கண்டக்டர்) கடைசி இடத்தில் உட்கார்ந்திருந்தார். வண்டியில் உட்கார்ந்திருந்த பலர் பல பொருள்களைப் பற்றிப் பேசினர்.

துணையாளர் ஊதுகுழலை எடுத்து ஊதினார். மோட்டார் ஓட்டி வண்டியை ஓட்டினார். வண்டி நகர்ந்தது. அப்பாடா! அப்பொழுது தான் காற்று வீசிற்று. சுகமாய் இருந்தது. வண்டி போகும் பொழுது, சாலையில் போகும் மற்ற வண்டிகளும், ஜனங்களும், பிரயாணிகளும் விலகிக் கொள்ளும்படி மோட்டாரோட்டி அடிக்கடி 'பூம்பூம்' என ஊதி வந்தார்.

நாங்கள் சென்ற வழியில் அநேக ஊர்கள் இருந்தன. எங்கள் மோட்டார் அங்கெல்லாம் நிற்கவில்லை. சில ஊர்களில் மட்டும்தான் நின்றது. சாலை மார்க்கத்தில் சிறிது தூரம் மட்டுந்தான் நன்செய் நிலங்கள் காணப்பட்டன. புன்செய்ப் பயிராகிய நிலக்கடலைச் செடிகள் அதிகமாகத் தெரிந்தன. சோளப் பயிர்கள் தலையில் வெண்நிறக் கதிர்களோடு தோன்றின. இக்காட்சி, பார்வைக்கு வெகு அழகாயிருந்தது.

எங்கள் வண்டி ஆண்டிபட்டி மலையில் ஏறும்போது மெதுவாகவே சென்றது. மோட்டாரோட்டி 'பிரேக்' என்ற தடுப்பைப் பிடித்துக் கொண்டே வந்தார். இம்மலையின் ஓரிடத்தில் இருப்புப்பாதை போடுவதற்காகக் குடைந்திருப்பது தொழிலாளரின் வேலைத் திறமையைக் காட்டத்தக்க சாட்சியாயிருக்கிறது. வழியில் உசிலம்பட்டி, செக்கானூரணி ஆகிய ஊர்களைத் தாண்டிச் சென்றோம்.

மதுரைக்குப் பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்தில் நாங்கள் வரும்பொழுதே, மதுரை நகர்க் கோபுரங்கள் காணப்பட்டன. சாலையின் இரு மருங்குகளிலும் பச்சைப் பசேல் என்றிருந்த செடிகளும், தென்னந் தோப்புக்களும் எங்கள் மனதைக் களிப்பித்தன. நாங்கள் ஏறிவந்த வண்டி சரியாய் 6·37 மணிக்கு இந்நகர் மோட்டார் நிலையத்தில் வந்து நின்றது. நாங்கள் இறங்கி வீடு போய்ச் சேர்ந்தோம்.

இங்ஙனம்,
உன் அன்பார்ந்த நண்பன்,
பா. நடேசன்.

---

# 27. சாரணர் இயக்கம்

| | | | |
|---|---|---|---|
| நெறி | தொகுதி | திருத்தம் | கௌரவம் |
| அணி | இளமை | நன்னெறி | உறுதிமொழி |
| பாகை | முதுமை | நேசித்தல் | கொண்டாடு |
| கழகம் | இயக்கம் | நம்பிக்கை | கீழ்ப்படிந்து |

நல்லொழுக்கம் நன்மை தரும். நல்லொழுக்கம் உடையவர்களையே உலகத்தாரும் விரும்புவர். தீயொழுக்கம் தீமை பயக்கும். தீயொழுக்க முடையவனை ஒருவரும் விரும்பார். தீயொழுக்க முடையவன் எவ்வளவு படித்தவனாயினும், எத்துணைச் செல்வமுடையவனாயினும் அவனை யாவரும் வெறுப்பர்; விரும்பிக் கொண்டாட மாட்டார்கள்.

ஆகையினால், சிறுவர்களை இளமையிலிருந்தே நல்லொழுக்கம் உடையவர்களாகப் பழக்கவேண்டும். அவர்கள் நல்லவர்களோடு பழகுதல் வேண்டும்; நல்ல செயல்களையே செய்தல் வேண்டும். தாய் தந்தையர்களுக்கும் மற்றுமுள்ள பெரியோர்களுக்கும் அவர்கள் கீழ்ப்படிந்து நடத்தல் வேண்டும். இளமையில் நல்லொழுக்கத்திற் பழகாதவர் முதுமையில் எங்ஙனம் நல்லொழுக்கமுடையவராவர்? இளமரத்தை வளைக்கலாம்; முதிர்ந்த மரத்தை வளைக்க முடியுமா? அஃது எவ்வாறு முடியாதோ அதைப் போலவே, சிறுவர்கள் இளமையில் நல்லொழுக்கங்களைக் கைக்கொள்ளாவிட்டால் முதுமையில் அவர்களைத் திருத்த முடியாது.

இதை நோக்கியே இக்காலத்தில் பாடசாலைகளில் சிறுவர்களை நல்லொழுக்கத்திற் பழக்குவதற்குப் பல கழகங்களை ஏற்படுத்தி யிருக்கின்றனர். அக் கழகங்

களில் ஒன்று சாரணர் இயக்கம். இவ்வியக்கத்தில் சேர்ந்த சிறுவர்களுக்குச் 'சாரணச் சிறுவர்' என்று பெயர். ஆங்கிலத்தில் இவர்களை, 'பாய் ஸ்கௌட்ஸ்' என்பர்.

சாரணர் இயக்கமானது பலர் சேர்ந்த ஒரு தொகுதியாகும். அத் தொகுதியினருக்குச் சாரணர் படை அல்லது தொண்டர் படை என்று பெயர். இப்




படையில் ஆறு வயது முதல் பதினேரு வயதுடைய வர்கள் ஒரு அணியாகவும், பதினேரு வயதுக்கு மேல் பதினெட்டு வயதுக்கு உட்பட்டவர்கள் ஒரு அணியாக வும் பிரிக்கப்படுவார்கள்.

சாரணச் சிறுவன் ஒருவன், படத்தில் காட்டிய படி தன் கைச் சிறுவிரலின் மீது கட்டை விரலை யமுத்திக்கொண்டு மற்ற மூன்று விரல்களால் வணக் கம் செலுத்த வேண்டும். சாரணன், 'நான் கடவுளுக் கும், எனது தாய் நாட்டிற்கும் என்னாலியன்ற கடமை களைச் செய்வேன்; எப்பொழுதும் பிறர்க்கு உதவி

செய்யத் தயாராய் இருப்பேன்; சாரண இயக்கத்திற்குரிய சட்டத்திற்கு அடங்கி நடப்பேன்' என்ற மூன்று உறுதிமொழிகளையும் கூறவேண்டும். மூன்று விரல்களால் வணக்கஞ் செய்வது இம்மூன்று உறுதிமொழிகளையும் நிறைவேற்றுவேன் என்பதைக் குறிப்பிடுவதாகும்.

கௌரவமாயிருத்தல், சாரணனது முதல் விதியாகும். அவன் எவ்விதத் துன்ப காலத்திலும் உண்மையையே அணியாகக் கொள்ளவேண்டும். பிறர் மதிக்கத் தக்க விதமாய் நடந்துகொள்ள வேண்டும். யாவரது நம்பிக்கைக்கும் இடமாயிருத்தல் வேண்டும்.

தெய்வபக்தி, குருபக்தி முதலியன உடையவனாக இருக்கவேண்டும். அவன் எப்பொழுதும் பிறருக்கு உதவி செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருக்க வேண்டும். ஆபத்தில் உதவும்பொருட்டு நீந்தப் பழகிக்கொள்ள வேண்டும். காயம் பட்டவர்களுக்கும், தீவாய்ப்பட்டவர்களுக்கும் முதல் சிகிச்சை செய்யத் தெரிந்திருத்தல் வேண்டும்.

சகோதர எண்ணத்துடன் யாவரையும் நேசிக்க வேண்டும். சாதிமதபேதமின்றியும், செல்வர், ஏழை என்ற வேறுபாடின்றியும், யாவரிடத்தும் சமமாயும், அன்பாயும், நட்பாயும் நடந்துகொள்ள வேண்டும். யாவரிடத்தும் மரியாதையாக நடந்துகொள்ளவேண்டும். பிறவுயிர்களிடத்தில் அருளுடையவனாய் இருத்தல் வேண்டும். அடக்கமுடையவனாய்ப் பெரியோர்கள் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து ஒழுகவேண்டும். மனோதைரியமுடையவனாக இருக்கவேண்டும். சிக்கனமுடையவனாயும் இருத்தல் வேண்டும். உள்ளும் புறமும்

ஒத்து நடத்தல்வேண்டும். இவைகளன்றி ஆசிரியர் அவ்வப்போது கூறும் நன்னெறிகளின்படியும் ஒழுக வேண்டும்.

இந்தச் சாரணர்களை நீங்கள் திருவிழாக் காலங்களிலும் பெரிய கூட்டங்கள் கூடும் இடங்களிலும் காணலாம். அவர்கள் மக்கள் ஒழுங்காய்ச் செல்ல உதவுவர்; சண்டை, சச்சரவு, திருட்டு முதலியன நடவாது பார்த்துக்கொள்வர்; வழி தெரியாதவர்களுக்கு வழி காட்டுவர்; காணுமற்போன குழந்தைகளைத் தேடிப் பிடித்துப் பெற்ருேர்களிடம் ஒப்படைப்பார்கள். இத்தனை உபகாரங்களையும் அவர்கள் யாதொரு பலனையும் எதிர்பாராதே செய்கிருர்கள். இப்படிப் பட்ட நல்ல பழக்கங்களெல்லாம் இளமையிலேயே உண்டாவதால் அவர்கள் பிற்காலத்தில் நன் மக்களாய் விளங்குவார்கள் என்பதில் ஐயமில்லை.

பிள்ளைகளே, நீங்களும் இவ்விதச் சாரணர் படையிற் சேர்ந்து சிறந்து நல்லொழுக்கமுடைய நன் மக்களாக விளங்குவீர்களாக.

### வினுக்கள்

1. சாரணரின் மூன்று உறுதிகள் யாவை ?
2. சாரணர் கைக்கொள்ள வேண்டும் விதிகள் யாவை ?
3. சாரணச் சிறுவரின் வேலைகள் என்ன ?

### பயிற்சி

1. பின்வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்பொருள்களைக் கூறுக:

(1) நல்லவர்களையே உலகம் புகழும்.
(2) நான் பாடத்தைப் படித்தேன்.

2. கீழ்வரும் சொற்களை வைத்து வாக்கியம் அமைக்க:

நல்லொழுக்கம், தயாராக, உறுதிமொழி.

# 28. மணிமேகலை

| | | | |
|---|---|---|---|
| கீதம் | இழிவு | நுகர்ச்சி | நீர்க்குமிழி |
| இட்டு | பசுமை | தடாகம் | உவவனம் |
| வளம் | பீடிகை | காரணம் | பளிக்கறை |
| துறவி | மாண்பு | பிரமாதம் | வேதாந்தம் |

## காட்சி I

இடம்:— காவிரிப்பூம் பட்டினத்தைச் சேர்ந்த உவவனம்.

பாத்திரங்கள்:— மணிமேகலை, சுதமதி, உதயகுமரன், மணிமேகலா தெய்வம்.

மணிமேகலை:— சுதமதி! இந்த வனம் எவ்வளவு அழகாயிருக்கிறது பார்!

சுதமதி:— ஆம்! உனது கலங்கிய உள்ளம் தெளிவு பெற்றதிலிருந்தே தெரியவில்லையா?

மணி:— ஆஹா! இவ் வனத்தில் இல்லாத மலர்கள் உலகிலேயே இல்லைபோல் தோன்றுகிறது.

சுத:— எங்கும் பசுமை தவழும் நிலத்தின் அழகாலும், நீர் நிறைந்த தடாகத்தின் மாட்சியாலும், பன்னிறப் பூக்களின் ஒளியாலும் காட்சிக்கினிமை நிறைந்தது இவ்வனம். தென்றல் காற்று உடம்புக்கும் உள்ளத்திற்கும் ஒருங்கே உற்சாகம் அளிக்கிறது. தடாகத்தின் இனிய நீர்ப்பெருக்கும், மரங்களிற் கனிந்து தொங்கும் கனி வகைகளும் நாவிற்கு இனிமை தருகின்றன. பன்னிற மலர்களின் நன் மணமோ நுகர்ச்சிக்கு இன்பம் தருகின்றது. பாடித்திரியும் பறவைகளின் கீதம் செவிக்கு விருந்தளிக்கிறது.

ஆகவே, இத்தகைய வனத்தின் மாண்பைச் சொல்ல வும் வேண்டுமா ?

மணி:— நன்று நன்று! ஏது கவியரசி யாகிவிட் டாயே, ஹா! அதென்ன தேரோசை கேட்கிறது! உதயகுமரரோ?

சுத:— (பரபரப்புடன்) ஆம், மணிமேகலா! நீ உடனே அதோ அந்தப் பளிக்கறைக்குள் புகுந்து கொள். நான் எப்படியாவது அரசிளங்குமாரை அனுப்பி விடுகின்றேன்.

(மணிமேகலை பளிக்கறையுட் புகுதல். உதயகுமரன் வருகை)

உதயகுமரன்:— பெண்ணே! உன்னுடன் வந்த மணிமேகலை எங்கே? (சுற்றுமுற்றும் பார்த்தல்) ஹா! அதோ அப் பளிக்கறையில் அவள் உருவம் தெரி கிறது. நானே சென்று பார்க்கிறேன். (பளிக்கறையருகில் சென்று சுற்றிச் சுற்றி வந்தும் திறக்க முடியாமல் மீண்டும் சுதமதியை அடைந்து) பெண்ணே! மணிமேகலை எத் தகையவள் ?

சுத:— அரசிளங்குமாரரே! அவள் இவ்வுலக ஆசையை வெறுத்துத் துறவொழுக்கத்தில் ஈடுபட்ட வள். செல்வமும் பதவியும் அவளை மயக்கம் செய்யா. தூய ஒழுக்கத்தின் சிறப்பால் தீயரைச் சபிக்கும் ஆற்றலும் உடையவள்.

உதய:— ஓகோ! என்ன பிரமாதமாகப் பேசு கிறாயே!

சுத:—பிரமாதம் ஒன்றுமில்லை, அரசிளங்குமரரே! உண்மையே. கரிகாலன் மரபில் தோன்றிய உமக்குப் பெண்ணாகிய நான் சொல்லக் கூடியது ஒன்றுமில்லை.

இருப்பினும் என் உள்ளத்தே தோன்றும் சிலவற்றைச் சொல்ல விரும்புகின்றேன். இந்த உடம்போ நீரில் எழுத்துப்போல் நிலையற்றது. இதன் இளமையும் அழகும் நீர்க்குமிழி போன்றன. ஆகவே இதில் மயங்குவது அறிவுடைமையாகுமா ?

உதய:— போதும் உன் வேதாந்தம். மணிமேகலையை அடைய எனக்கு வழி தெரியும். (போகிறான். மணிமேகலை பளிக்கறையிலிருந்து வெளியே வந்து)

மணி:— சுதமதி, இளவரசர் என்ன பேசினார் ?

சுத:— என்ன பேசினார். நம்மைப் பற்றி அவர் கொண்டுள்ள இழிவான கருத்தை வெளியிட்டார். உன்னையடையத் தனக்கு வழி தெரியும் என்று கூறிச் சென்றார்.

மணி:— அப்படியா ? ஆனால் சுதமதி ! என்ன காரணமோ தெரியவில்லை. என் உள்ளம் அவரிடம் பற்றுக்கொள்கின்றது.

(மணிமேகலா தெய்வம் வருதல்)

மணி-தெய்வம்:— நீங்கள் யார் ? இரவு வந்து கொண்டிருக்கிறது. இங்கு என்ன செய்கிறீர்கள்?

சுத:— அம்மா ! என் பெயர் சுதமதி. இவள் என் தோழி மணிமேகலை. இவ்வூரினராகிய கோவலனார் மகள். மலர் பறிப்பதற்காக இங்கு வந்தோம். அரசிளங்குமரர் வந்ததால் நாழிகையாகி விட்டது. ஐயோ ! என்னவோ மயக்கமாக வருகிறதே. ஹா ! மணிமேகலையும் மயங்கி விழுந்து விட்டாளே. (மயங்கி வீழ்தல்)

(மணிமேகலா தெய்வம் மணிமேகலையை எடுத்துச் சென்று விடுதல்.

## காட்சி II

இடம்:— மணிபல்லவம்.

பாத்திரங்கள்:— மணிமேகலா தெய்வம், மணிமேகலை, தீவதிலகை.

மணிமேகலை:— (தனிமொழி) ஆ! இதென்ன? நான் எங்கிருக்கிறேன்? பொழுது விடியும் வரை தூங்கி விட்டேனே. இது உவவனத்தில் ஒரு பகுதியோ. நான் இதற்கு முன் பார்த்ததே இல்லையே. எங்கும் ஒரே மணல் வெளியாயிருக்கிறதே. கடற்கரைபோல அல்லவோ இருக்கிறது. சுதமதி எங்கே? சுதமதீ! சுதமதீ! என்னைத்தனியே விட்டு எங்கே சென்ருய்! ஐயோ, அக்கிழவி ஏதேனும் மாயம் செய்துவிட்டாளோ! அச்சமாயிருக்கிறதே. என்ன செய்வேன்? (எழுந்து சுற்றுமுற்றும் பார்த்தல்) ஓ, இது முற்றும் புதிய இடம். இங்கெப்படி வந்தேன். ஐயோ! என் தாய் (மாதவி) என்னை நினைத்து வருந்துவளே. சுதமதியின் கதி என்ன ஆயிற்ருே தெரியவில்லையே!

(மணிமேகலா தெய்வம் வருதல்)

மணி-தெய்வம்:— குழந்தாய், வருந்தாதே! உன்னை நானே இங்குக் கொணர்ந்தேன். இது மணிபல்லவம் என்னும் தீவு.

மணி:— நீங்கள் யார்? என்னை ஏன் இங்குக் கொணர்ந்தீர்கள்? என் தோழி எங்கே!

மணி-தே:— நான் உங்கள் குலதெய்வம். என் பெயரையே உன் தந்தை உனக்கிட்டார். புத்ததேவரது அருள் மொழிகளின்படி தூய துறவொழுக்கத்தில் செல்லவேண்டிய நீ உலக மயக்கில் விழுந்து விடாத

படி உன்னைக் காக்கவே இங்கெடுத்து வந்தேன். உன் தோழியிடம் உன் விஷயத்தைச் சொல்லி, 'இன்றைக்கு ஏழாம் நாள் திரும்ப வருவாள்; இதை நான் சொன்னதாக மாதவியிடம் சொல்' என்று கூறி அவளை அனுப்பிவிட்டேன். மனங்கலங்காதே.

மணி:— ஆஹா! தங்கள் கருணையே கருணை! தாயே, தங்களை வணங்குகின்றேன்.

மணி-தெ:— பெண்ணே! இத்தீவிலுள்ள புத்த பீடிகையை வலம் வந்து வணங்கினால் உன் பழம் பிறப்பு நிகழ்ச்சிகளை நீ அறியலாம். அதனை அறிந்த பின் நீ உன் ஊருக்குச் செல்க. இப்படி என் அருகில் வா! பசியின்றி இருக்கவும், ஆகாயவழியே பறந்து செல்லவும், வடிவத்தை வேண்டிய விதமாக மாற்றிக் கொள்ளவும் உனக்குச் சில மந்திரங்களை உபதேசிக்கின்றேன். இவை உனது எதிர்கால வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படும்.

(மந்திரங்களை உபதேசித்தல்)

மணி:— தாயே, தங்களை நான் எவ்வாறு போற்றுவேன். (வணங்குதல்)

மணி-தெ:— நான் சென்று வருகின்றேன். நீ காவிரிப்பூம் பட்டினம் சென்றதும் உன் தாயையும் தோழியையும் கண்டு பேசி மகிழ்ந்த பிறகு, அங்குள்ள அறவணவடிகளிடம் சென்று புத்த தருமங்களைக் கேட்டுக்கொள். (மணிமேகலா தெய்வம் செல்லுதல். தீவதிலகை வருதல்)

மணி:— அம்மா! தாங்கள் யார்? இத்தீவில் யாரும் இல்லையென்றல்லவோ நினைத்துக்கொண்டிருந்தேன்.

தீவதிலகை:— பெண்ணே! நான் இத் தீவிலுள்ள புத்த பீடிகையைக் காக்குமாறு இந்திரனால் நியமிக்கப் பட்டவள். என் பெயர் தீவதிலகை என்பது. நீ யாரம்மா? இங்கெப்படி வந்தாய்?

மணி:— நான் காவிரிப்பூம் பட்டினத்தைச் சேர்ந் தவள். எங்கள் குலதெய்வம் என்னை இங்கெடுத்து வந்தது. என் பெயர் மணிமேகலை. இங்குள்ள புத்த பீடிகையைத் தரிசித்து வரவேண்டும் என்பது என் தெய்வத்தின் ஆணை.

தீவ:— அப்படியா! வா. பீடிகையைக் காட்டு கிறேன். ஆஹா, புத்தர் பெருமையே பெருமை!

### வினாக்கள்

1. உவவனத்தின் அழகை விளக்குக.
2. சுதமதிக்கும் அரசிளங்குமரனுக்கும் நிகழ்ந்த உரையாடலைப்பற்றி வரைக.
3. மணிபல்லவமடைந்த மணிமேகலை தனியே யாது கூறிப் புலம்புகிறாள்?
4. மணிமேகலா தெய்வத்தால் மணிமேகலையுற்ற பயன் யாது?
5. மணிமேகலையிடம் அத் தெய்வம் யாது கூறிப் போந்தது?

### பயிற்சி

நாடகத்தை நடித்துக் காட்டுக.

---

# 29. சித்திர விளக்கம்




கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை வைத்துக் கட்டுரை வரைக:

ஒருநாள் ஒரு மோட்டார் —— சென்று கொண்டிருந்தது. குறுக்கே வீதியில் ஒரு —— வந்து விட்டது. மோட்டார்க்காரர் —— நிறுத்த முயன்றார். அவரால் —— நிறுத்த முடியவில்லை; கார் —— மோதியது. மோட்டார் மிகுதியும் —— உற்றது. காரில் —— தப்பினார்கள். போலீஸ்காரர் —— பிடித்துக் கொண்டார். ஜனங்கள் —— கூடி விட்டார்கள். போலீஸ்காரர் —— விசாரித்தார். காரை —— ஓட்டியது —— என்றார். டிராம் வண்டியில் —— கார்தான் —— வந்தது. அதனால் மோட்டார்க்காரர் —— என்றார்கள். போலீஸ்காரர் —— நீதிபதியிடத்தில் —— விட்டார். நீதிபதி —— தண்டித்தார். காரை —— ஓட்டியது —— அல்லவா? ஆகையால் எப்பொழுதும் —— நிதானமாக ஓட்டவேண்டும்.

———

# 30. பத்திரிகைச் செய்தி

## வாழ்க சர்தார்

(தலையங்கம்)

இன்று தம் 75-வது பிராயத்தில் அடியெடுத்து வைக்கும் சர்தார் படேலைத் தேசம் முழுதும் நன்றியுடன் வாழ்த்தும். அவர் பெற்றுள்ள அபூர்வ அடைமொழிகளில், 'இரும்பு மனிதர்' என்பதும் ஒன்று. ஆம். அவர் இரும்பு மனிதரே என்பதில் சந்தேகம் இல்லை. இன்று நேற்றல்ல. முப்பது வருஷ காலமாக இப்பெயர் இவரை அண்டி நிற்கிறது. சடுதியில் முடிவுகாண வேண்டிய தருணமனைத்திலும், தீரமுடன் திட்டங்கள் வகுக்கவேண்டிய சந்தர்ப்பங்களில் எல்லாம் அம்மாதிரி ஒருவர் இல்லாவிட்டால் நம் கதி? வெளிக்குத்தான் முரடராக அவர் காட்சியளிக்கிறார். உள்ளூர அத்தனையும், பத்தரை மாற்றுத் தங்கம். காலஞ்சென்ற கவியரசி சரோஜினி தேவி வெகு அழகாக இதனை "பக்தி, விசுவாசம், அன்பு ஆகிய அரும்பெரும் பொக்கிஷங்கள் நிறைந்த இரும்புப் பேழை" என்று வர்ணித்திருக்கிறார். "நூற்றுக்கு நூறு சரி இந்த வருணனை" என்று அவரை அறிந்தோர் அனைவரும் கூறுவது திண்ணம்.

காந்திஜியிடம் அவருக்கிருந்த விசுவாசத்தை அனைவரும் அறிவர். எள் என அண்ணல் கூறுமுன், எண்ணெயுடன் நின்றார் அவர். அடிநாள் தொட்டுக் கடைசிவரை அவரைப் பொறுத்தமட்டில் ஒன்றே லக்ஷியம், ஒருவரே தலைவர், என்றுதான்

இருந்ததென்றால் மிகையாகாது. மக்களிடம் அவருக்குள்ள அன்பும் அளவிடற்பாலது. ஊண், உறக்கமின்றி உழைக்கிறார். ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டிய பருவத்தை எய்திவிட்டபோதிலும், சதா சர்வதா நோயும், நொடியும் வாட்டிவரும் போதிலும், நாட்டினர் நலனே அல்லும் பகலும் அவர் சிந்தையில் வட்டமிடுகிறது.

75-வது பிறந்த தினத்தைக் கொண்டு வந்த இவ்வருடம் பலவிதங்களில் அவருக்குப் புகழைத் தருவதாகும். அவை யனைத்திலும், சமஸ்தான ஐக்கியத்தை அவர் சாத்தியமாக்கியதே சிறந்தது என்பதில் சந்தேகம் இல்லை. நாம் பலகாலமாகக் கண்டு வந்த கனவு அது. இன்று அவருடைய தீர முயற்சியால் நனவாகி, இந்தியாவின் பிஸ்மார்க் என்ற புகழையும் சம்பாதித்துத் தந்திருக்கிறது. ஆனால், பிஸ்மார்க்கைப் போல் அல்லாது கத்தியின்றி, ரத்தமின்றியே இந்தப் பெரும் புரட்சியை அவர், வாதத்தையும் பகுத்தறிவையும் மட்டிலுமே உபயோகித்துச் சாதித்துவிட்டார்.

காந்தீயத்திற்கு அவர் செய்துள்ள சேவை எல்லாவற்றிலும் இதுவே தலை சிறந்தது என்பதில் ஐயமில்லை. அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து, நாட்டை வாட்டும் தீமைகளையும், அபாயங்களையும் பூண்டு அற ஒழித்து, மேலும் புகழுற வேண்டுமென அனைவருடன் நாமும் பிரார்த்திக்கிறோம்.

வாழ்க சர்தார்! வெல்க காந்தீயம்!

சுதேசமித்திரன் (1—11—49)

---

# 31. வான வூர்தி

| | | | |
|---|---|---|---|
| சக்தி | உறுப்பு | வாகனம் | அனுசரித்து |
| அம்பு | காற்றுடி | தோற்றம் | உபயோகம் |
| முடுக்கி | யந்திரம் | வேகமாய் | வியக்கத்தக்க |
| துடுப்பு | தெப்பம் | ஆராய்ச்சி | பயன்படுத்தல் |

மனிதர் நெடுங்காலமாக மாட்டுவண்டி, குதிரை வண்டி முதலியவைகளைக் கொண்டு தரை வழியாகப் பிரயாணம் செய்தார்கள். பின்னர் புகை வண்டி, மோட்டார் முதலியன கண்டு பிடிக்கப்பட்டன. அயல் நாடுகளுக்குச் செல்லக் கடல் வழியாகப் பிரயாணம் செய்ய எண்ணிய மனிதர் அதற்குத் தெப்பம், படகு, கப்பல் முதலியவற்றைப் பயன் படுத்தினார்கள். பிறகு நீராவியால் இயங்கும் கப்பல் மூலமாகத் தண்ணீரில் மிகவும் வேகமாய்ச் செல்ல முயன்றார்கள்.

இப்பொழுதோ வானத்தின் வழியாய்ப் பிரயாணம் செய்வதற்கும் புதிதாய் ஓர் ஊர்தியைச் செய்திருக்கிறார்கள். அதற்கு வானவூர்தி என்று பெயர். அது மிகவும் வியக்கத்தக்கது. தரையிலும், நீரிலும் செல்லும். மற்றெல்லா ஊர்திகளையும் விட அது மிகுந்த வேகமாய்ச் செல்லும்.

சிறுவர்கள் ஆகாயத்தில் காற்றுடி விடுவது உங்களுக்குத் தெரியுமல்லவா! பறவைகளும் வானத்தில் பறக்கின்றன. இவ்விரண்டையும் கருதிப் பார்த்த மனிதர் நாமும் ஏன் வானத்திற் பறக்கலாகாது என எண்ணினர். அவ்வெண்ணம் நிறைவேறப் பலர் பல வழிகளில் முயன்றனர். எவ்வளவோ துன்பங்களையும்,

உயிர்ச் சேதங்களையும் அடைந்த பிறகு வானத்தில் வெற்றி பெற்றனர் அவர்கள். முதலில் ஒரு வாகனத்தை அமைத்தார்கள். பறவைகளின் இறக்கைகள் போன்ற வடிவமுள்ள இரண்டு நீண்ட தகடுகளை வாகனத்தின் இருபுறத்திலும் அமைத்தார்கள். காற்றாடி,



வாலின் துணைகொண்டு பறப்பது போன்றே, விமானமும் வானத்தில் பறப்பதற்குத் துணையாக அதற்குத் தக்க அளவில் வாலை யமைத்தார்கள்.

இவ்விதமாக அவர்கள் பல்லாண்டுகளாகப் பல வித முயற்சி செய்து இப்பொழுது வானத்தில் பறக்கும் விமானங்களைக் கண்டு பிடித்தனர். ஆகாய விமானமானது ஏறக்குறைய ஒரு பறவையைப்போல் தோற்றமளிக்கும். அதன் முன்புறத்தில் இரண்டு உறுப்புக்களுண்டு. அவை வெகு வேகமாய்ச் சுழலக் கூடியவை. உட்புறம் படகுபோல் உட்கவிந்திருக்கும். அதன் முன் புறத்தில் மோட்டார் யந்திரம் போன்ற மிக்க பலமான யந்திரம் அமைக்கப்பட்டிருக்கும். அது ஒருவகை மண்ணெண்ணெயால் இயங்கும். மத்தியில் பிரயாணிகள் உட்காருவதற்கு உரிய இடம் அமைக்கப்பட்டிருக்

கும். பின்புறத்தில் நீண்ட வாலிருக்கும். அது யந்திரத்தின் சக்தியால் விமானம் மேலே ஏறவும், கீழே இறங்கவும், திரும்பவும் துடுப்புப்போல உதவி செய்கிறது. விமானத்தைச் செலுத்துவோன் முன்புறத்தில் இருந்து கொண்டு அவ்வியந்திரத்தை முடுக்கி விடுவான். அப்பொழுது கைபோன்று முன்புறத்தில் இருக்கும் உறுப்புகள் வெகு வேகமாய்ச் சுற்றும். அந்த இயக்கத்தால் விமானம் மேலே ஆகாயத்திற் சென்று நிலைபெற்று, பறக்கத் தொடங்குகிறது.

இவ் விமானம் 15,000 அடி உயரம் வரையில் செல்லும். அது மிக உயரம் போவதன்றி மிக்க வேகமாகவும் செல்லும். ஒருமணி நேரத்தில் 100 அல்லது 120 மைல் தூரம் செல்லுகிறது. சில விமானங்கள் அதற்கதிகமாகவும் செல்லும். சில ஆண்டுகளுக்குமுன் நடந்த ஐரோப்பியப் போரில் விமானங்கள் பல உபயோகப்படுத்தப்பட்டன. இக்காலத்தில் இவ்விமானங்கள் தபால் கொண்டு செல்லவும், பிரயாணம் செய்யவும் பயன்படுகின்றது. இதனைக் கண்டுபிடித்தவர்களது அறிவும், ஆராய்ச்சித் திறனும் மிகுதியும் வியக்கத் தக்கவையே.

### வினாக்கள்

1. ஆகாய விமானத்தின் அமைப்பை விவரி.
2. ஆகாய விமானம் எவ்வாறு இயங்குகிறது ?
3. ஆகாய விமானத்தின் பயன் என்ன ?

### பயிற்சி

பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று ஆகியவற்றைக் கூறுக:

(1) விமானம் வானத்தில் பறந்து சென்றது.
(2) நேற்று வந்தவர் கொடுத்த புத்தகத்தைப் படிக்கிறேன்.

# 32. வள்ளுவர் வேதம்

| | | | |
|---|---|---|---|
| குலம் | வேதம் | மானிடர் | செந்தமிழ் |
| பொலி | பயிலல் | ஒப்புயர் | ஜெயமுரசு |
| காதல் | சாதனம் | முத்தமிழ் | பொதுமுறை |
| பேதம் | முப்பால் | இல்லறம் | சன்மார்க்கம் |

நாதநாமக்கிரியை] [திஸ்ர ரகம்

வள்ளுவர் செந்தமிழ் வேதம்—அது
மானிடர்க் கெல்லாம் பொதுமறை யாகும்
உள்ளத்தில் ஒன்றி யெல்லாரும்—இதை
ஓதி ஒருகுல மாக நாம் வாழ்வோம் (வள்)

சாதிமத பேத மில்லை—தூய
சன்மார்க்க சாதனம் சாற்றுங் குறளை
மேதினி யெல்லாம் பயின்றால்—மிக
மேன்மையாய் வாழலாம் மானிட ரெல்லாம் (வள்)

அன்பும் அறமும் பொருளும்—வீர
ஆற்றலும் காதலும் போற்றிப் பொலியும்
இன்பத்தி லே இரு பாலார்—கூடி
இல்லறம் செய்திட நல்வழி காட்டும் (வள்)

ஒப்புயர் வற்ற தமிழர்—பெற்ற
ஒப்புயர் வற்ற உயர்பெரும் வேதம்
முப்பாலை அள்ளிக் குடிப்போம்—எங்கள்
முத்தமி ழுக்கு ஜெயமுர சடிப்போம். (வள்)

— யோகி சுத்தானந்த பாரதியார்

### வினாக்கள்

1. வள்ளுவரியற்றிய வேதமாவது யாது?
2. அது எப்படிப்பட்டது?
3. அதனிற் கூறப்பட்டுள்ளன யாவை?

---

# 33. வெற்றி வேற்கை



ஔவையார் அருளிச் செய்தது

1. கல்விக் கழகு கசடற மொழிதல்.
2. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
3. மன்னவர்க் கழகு செங்கோல் முறைமை.
4. மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்.
5. அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.
6. வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை.
7. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற ஓங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலா காதே.
8. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆள்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.
9. உற்றோ ரெல்லாம் உறவினர் அல்லர்.
10. அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது.
11. பெருமையும் சிறுமையும் தான்தர வருமே.
12. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயின் பொறுப்பது கடனே.
13. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலு மரிதே.
14. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.
15. கற்கை நன்றே கற்கை நன்றே.

---

# 34. மூதுரை

ஔவையார் அருளிச் செய்தது

நன்றியொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். (1)

நல்லார் ஒருவர்க்குச் செய்த வுபகாரம்
கல்மேல் எழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். (2)

அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (3)

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று. (4)

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவும் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் தீது. (5)

# ஜவஹர்லால் நேரு

1 முத்தினி லேவந்த வைரமவன்—எங்கள்
மோகன காந்தியின் ரத்னமவன்
சத்தி நிரம்பிய வித்தகனும்—எங்கள்
ஜவஹர் நேருவை வாழ்த்திடுவோம். (முத்)

2 அச்சத்தைப் போக்கும் மொழியுடையான்—அவன்
ஆண்மை கனலும் விழியுடையான்
வச்சிரம் போன்ற உடலுடையான்—ஜன
வசிய மான நடையுடையான். (முத்)

3 ஏழைக்குதவிடும் தோழனவன்—உல
கெல்லாம் புகழ்அறி வாளனவன்
கோழை யடிமைத் துயரைக் குமைத்திடக்
குமுறிப் போர் செய் குரிசிலவன். (முத்)

4 வீர சுதந்தர பேரியவன்—இந்த
மேதினிக் கேஉப காரியவன்.
தீர னவன்பர சூரனவன்—சர்வ
தேசக் கலையறி நேசனவன். (முத்)

5 ஊழி யிடிகள் உருமிடினும்—சற்றும்
உள்ளந் தளராத வில்லனவன்
ஆழி யவன் அறிவாழியவன்—உல
காளி யவன் என்றும் வாழியவே. (முத்)

—சுத்தானந்த பாரதியார்.